# உங்கள் மகள் சிரமப்பட்டுப் படிப்பது மட்டுமே போதாது.
## அவளுக்கு ஒளிமயமான எதிர்காலத்தை உருவாக்க நீங்கள் திட்டமிட வேண்டும்.






இரவு முழுதும் கண்விழித்து படித்து, முன்னேற வேண்டும் என்ற மன உறுதி. அதோடு யூடிஐ வழங்கும் 'காலேஜ் & கேரியர் ஃபண்டில்' நீங்கள் செய்யும் முதலீட்டைப் பயன்படுத்தி, அவள் அந்த உச்ச நிலையை எய்தும் குறிக்கோளை சாதிப்பதற்கு சாத்தியமாகும்.

உங்களுடைய குழந்தை/மகள் 15 வயதிற்குட் பட்டிருப்பின், நீங்கள் இப்போதே முதலீடு செய்து அவளுடைய ஒளிமயமான எதிர்காலத்திற்கு வழி வகுக்கலாம். அது அவளுடைய கல்லூரி மேற்படிப்பிற்கோ அல்லது தொழில் துவங்கவோ கை கொடுத்து உதவும். ஃபண்டின், படிப்படியாக பணத்தை திருப்பி எடுக்கவல்ல சௌகரியம், அந்த டியூஷன் மேலும் மற்ற செலவுகளுக்கு தேவையான போது பெரிதும் உதவிடும். ஆண்டாண்டு தோறும் அதிகமாய் முதலீடு செய்வீர்களேயானால், அவளுடைய எதிர்காலம் அதிக ஒளிமயமாய் அமையும். இந்த ஃபண்ட் வளர்ந்து கொண்டே இருக்கிறது. உங்கள் குழந்தை வளர்வதைப் போன்றே வளரும் வகையில் உங்கள் பணத்தை யூடிஐ முதலீடு செய்வதுதான் அதற்குக் காரணம்.

### சிறப்பு அம்சங்கள்

- ☐ ஒரு ஓப்பன் — எண்டெட் திட்டம்.
- ☐ 15 வயதுக்குட்பட்ட குழந்தைகளுக்கான திட்டம். 18 லிருந்து 23 வயதுவரை படிப்படியான முறையில் பணத்தைத் திருப்பி எடுக்கவல்லது.
- ☐ ஒவ்வொரு யூனிட்டும் ரூ.10, குறைந்தபட்ச முதலீடு ரூ.2000, மற்றும் அதற்கு மேல் ரூ.500-ன் மடங்கில், 15 வயதுக்குட்பட்ட உங்கள் குழந்தைக்கு.
- ☐ பண்டில் ஏற்படும் வளர்ச்சி போனஸ் யூனிட்டு களாக அதற்குரிய காலவரையில் சேர்க்கப்படும்.
- ☐ ஒவ்வொரு ஆண்டும் இருமுறை பகுதியளவு பணத்தைத் திருப்பி எடுத்தல் அனுமதிக்கப்படும் — 18 வயதில் 50% பிறகு ஒவ்வொரு ஆண்டும் அதோடு 10% கூடுதலாக 23 வயதுவரை.
- ☐ ஒன்றுவிட்ட அடுத்த குழந்தைக்கு (15 வயதுக்குட் பட்டவர்) நியமன வசதி.

விண்ணப்ப பாரங்களுக்கு ஏதேனும் யூனிட் ட்ரஸ்ட் காரியாலயம், முக்கிய பிரதிநிதி அல்லது ஏஜெண்டுகளையோ அணுகவும்.



**யூனிட் டிரஸ்ட் ஆஃப் இந்தியா**
உங்கள் ஒளிமயமான எதிர்காலத்திற்காக

எல்லா செக்யூரிட்டி முதலீடுகளும் மார்க்கெட் ரிஸ்கிற்கு உட்பட்டவைகளாகும். முதலீடு செய்யுமுன் உங்களுடைய முதலீட்டு ஆலோசகர் அல்லது ஏஜென்டை ஆலோசிக்கவும்.



**CHILDREN'S COLLEGE AND CAREER FUND**
UNIT PLAN-93

ஏனெனில் உங்கள் குழந்தைக்கு நீங்கள் கடமைப்பட்டிருக்கிறீர்கள்.

**திட்டம் துவங்கிய தேதி: ஜூலை 12, 1993**

மண்டல அலுவலகம்: 29, இராஜாஜி சாலை, சென்னை 600 001. போன்: 517101
கிளை அலுவலகங்கள்: • கோயம்புத்தூர். போன்: 210399 • சென்னை. போன்: 517101, 517190 • மதுரை. போன்: 38186
• திருச்சி. போன்: 32619

UTI.57.93 TM D

# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகி ரெட்டி





## அமெரிக்காவிலும் எழுத்தறிவின்மை!

மகாத்மா காந்தியடிகள் இளமையில் பாரிஸ் டபுராகி தென்னாப்பிரிக்காவில்தான் வழக்கறிஞர் தொழிலை ஆரம்பித்ததாரேயல்லாது இந்தியாவில் அல்ல. அவரைப் போலவே பல இந்தியர்கள் வெளிநாடுகளில் படித்துவிட்டு வெளிநாடுகளில் வேலை பார்க்கிறார்கள். தற்போதோ இந்தியாவில படித்துவிட்டு அயல் நாடடுகளுக்குப்போய் வேலையில் அமர்வோர் தொகை பெருகிக் கொண்டே போகிறது. இதனை அறிவுக் கழிவு' என்று வர்ணித்து இந்தக் கழிவை நிறுத்தி அறிவைத் தக்க வைத்துக் கொண்டு நம் நாட்டை முன்னேறச் செய்ய வேண்டும் என்ற கூக்குரல் எழுந்து வருகிறது.

அமெரிக்கா, மேலை நாடுகள் என்ற மோகம் தற்போது அதிகமாகிவிட்டது. அந் நாடுகளை வளமிக்க நாடுகளாவும் நம்நாட்டை வளர்ந்து வரும் நாடாயும் வேறு சில நாடுகளை வளர்ச்சியுறா நாடுகளாயும் பிரித்துப் பேசுகிறார்கள்.

ஆனால் இந்த முன்னேறிய நாடான அமெரிக் காவில் பாதிக்கு மேற்பட்டவர்கள் எழுத்தறிவற்றவர்கள் என்பது அண்மையில் நடந்த கணிப்பில் தெரிய வந்துள்ளது. கணக்கு முக்கால்வாசிப் பேர்களுக்கு வரவே வராதாம்! ஒரு சாதாரண வடிவத்தைப் பூர்த்தி செய்யக் கால் வாசிக்கு மேற்பட்டவர்களுக்குத் தெரியாதாம்.!

இக்காரணத்தால் நன்கு படித்த இந்தியர்களுக்கு எளிதில் சில அமெரிக்கா போன்ற நாடுகளில் வேலைகள் கிடைத்து விடுகின்றன. நம் நாடு தற்போது எழுத்தறிவின்மையைப் போக்க தீவிர முயற்சியில் இறங்கியுள்ளது. முதியோர் கல்வித் திட்டம் (ஒரு ஆசிரியர் ஒர மாணவன் திட்டம் என்றெல்லாம் அமல்) படுத்தப்பட்டு வருகிறது. இம்மாதிரி திட்டங்களை ஏற்று தனது நாட்டில் நடத்த அமெரிக்கா முன்வருமா?




மதிமுகம்: 93 நவம்பர் 1993 புன்னகை: 5

தனிப்பிரதி: ரூ. 4-00 வருட சந்தா: ரூ. 48-00





உங்கள்
பார்பி
டி ரெ ஸ்
டிஸைனர்
ஆகுங்கள்
உங்கள் இனிய தோழி பார்பிக்கு விதவிதமான
உடையணிந்து அழகு பார்க்க இதுவே வாய்ப்பு.
நீங்கள் செய்யவேண்டியதெல்லாம் இதுதான். இங்குள்ள
விதவிதமான உடைகளை வெட்டி எடுத்து பார்பியின்
மேல் வைத்து அழகு பாருங்கள். எந்த உடை பார்பிக்கு
மேச்சாக, மிக அழகாக இருக்கிறதோ அதை பார்பியின்
மேல் ஒட்டி முழு படத்தையும் அனுப்பவும். அதோடு
உங்கள் பெயர், வயது, பள்ளி மற்றும் ஒரு
சுயவிலாசமிட்ட கவர் ஆகியவற்றை இணைக்கவும்.
எங்கள் முகவரி : தி ஃபேஷன் டிஸைனர் கேம்,
ப்ளோப்லாஸ்ட் லிட்., (டாய்ஸ் டிவிஷன்) 88-ஸி, ஓல்ட்
பிரபாதேவி ரோடு, பம்பாய்-400 025.
நூறு மிக அழகாக உடையணிந்த பார்பி
அனுப்புவோருக்கு ஒரு சூப்பர் பார்பி புளோ-அப் பரிசு.
Barbie
FROM
ஒவ்வொரு செல்லப்பெண்ணின் நனவாகும் கனவு
HTA.1317.94


LEO



# நண்பர்களாகி விட்ட எதிரிகள்





நெடுங்காலமாகப் போரிட்டுக் கொண்டிருந்த யூதர்களும் பாலஸ்தீன் அராபியர்களும் இந்த ஆண்டு செப்டம்பர் 13ந் தேதி வரலாற்றுப் புகழ்கொண்ட ஒப்பந்தம் ஒண்றைச் செய்து கொண்டு நண்பர்களானார்கள். வாஷிங்க்டனில் உலகத் தலைவர்கள் முன்னிலையில் இந்த ஒப்பந்தம் ஏற்பட்டது. இஸ்ரேல் அயல் நாட்டு அமைச்சர் ஷிமென் பெரிஜும் பாலஸ்தீன விடுதலை அமைப்பின் அரசியல்துறைத் தலைவர் மகம்மது அப்பாஸும் இதில் கையொப்பமிட, இஸ்ரேல் பிரதமர் ஐசக் ராபினும் பாலஸ்தீன விடுதலை அமைப்பின் தலைவர் யூசர் அராபத்தும் இதற்கு ஒப்புதல் அளித்துத்தம் மகிழ்ச்சியைத் தெரிவித்தனர்.

தம் சொந்த உறை விடமான பாலஸ்தீனத்திலிருந்து அராபியர்களை, அங்குவந்து குடியேறிய யூதர்கள் விரட்டியதால் நாற்பது ஆண்டுகளுக்கும் மேலாக பாலஸ்தீனர்களுக்கும், யுதர்களுக்குமிடையே சண்டைகளும் மோதல்களும் நிகழ்ந்து வந்தன. இந்த ஒப்பந்தப்படி காஜாப் பகுதிக்கு மேற்குப் பகுதியில் வாழும் மூன்று லட்சம் பாலஸ்தீனர்கள் சுயாட்சியை பெறுவர். இது அடுத்த இரண்டு ஆண்டுகளில் யூதர்களுக்கும் பாலஸ்தீனர்களுக்குமிடையே ஏற்படப்போகும் ஒப்பந்தத்திற்கு முன்னோடி போலாகும்.

இந்த ஒப்பந்தம் ஏற்பட இருபத்திரண்டு ஆண்டுகளுக்குமுன் ஐக்கிய நாடுகள்

அமைப்பால் அடிக்கோல் நாட்டப் பட்டது. பாலஸ்தீன இஸ்ரேல் தகராறை அந்த இருபிரிவினரும் பேசி சுமுகமான தீர்வு காணவேண்டும் என அது கூறியது.

1917 நவம்பர் 12ந்தேதி பால்சர் அறிவிப்பிலிருந்து யூதர்களுக்கும் பாலஸ்தீனர் களுக்குமிடையே விவாதம் மூண்டது எனலாம். 'லீக் ஆப் நேஷன்ஸ்' என்ற அப் போதைய உலகசபை பாலஸ்தீனத்தை பிரிட்டனிடம் ஒப்படைத்து. அப்போதைய பிரிட்டிஷ் அயல் நாட்டு செயலர் லார்ட் ஆர்தர் பார்பர் யூதர்களின் தாய்நாட்டிற்கு அனுகூலமாக இருந்தனர். இந்த அறிவிப்பு வரும் வரை தனிநாடு வேண்டாம் என்று கூறிவந்த யூதர்கள் இந்த அறிவிப்பு வெளியானதும் அவர்கள் தனி யூதர் நாடு வேண்டுமெனக் கோரினார்கள். அதுமட்டுமல்ல, அங்கு குடியேறிய யூதர்கள் அங்கு வசித்து வந்த அராபியர்களை விரட்டினார்கள்.

இரண்டாவது உலகப்போர் 1945ல் முடிந்தபோது பாலஸ்தீனத்தில் யூதர் களின் எண்ணிக்கை அதிகரித்துவிட்டது. யூதர்களின் இயக்கம் பலமடைந்தது. ஐ.நா. சபையும் யூதர்களின் நாட்டை அங்கீகரிக்கத் தயாரானது. 1948 மே 14ல் யூதர்கள் தன்னிச்சையாக இஸ்ரேல் என்ற நாடு உருவானதாக அறிவித்தார்கள். அன்றிலிருந்து பாலஸ்தீனர்களுக்கும் யூதர்களுக்குமிடையே போர் மூண்டது.

இஸ்ரேல் 1947ல் எகிப்து, சிரியா, ஜோர்டான் ஆகிய நாடுகளைத் தோற் கடித்து காஜா, சினாய், கோலன்குன்றுகளைத் தன்வசப் படுத்திக் கொண்டது. 1973ல் எகிப்து சினாயை மீட்டது. லெபனானின் பெய் ரூட்டில் இச்சமயம் பாலஸ்தீன விடுதலை இயக்கத்தின் தலைமை அலுவலுகம் அமைந்தது. அதனால் இஸ்ரேல் லெபனானைத் தாக்கியது. விடுதலை இயக்கத் தலைமை அலுவலகம் டூனிஸியாவிற்கு மாற்றப்பட்டது. 1988ல் ஜோர்டான் நதியின் மேற்புறப் பகுதி பாலஸ்தீன ருக்கு சொந்தம் என ஜோர்டான் அறிவித்தது.

1990ல் அமெரிக்காவும் அப்போதைய ரஷ்யாவும் யூதர்களும் பாலஸ்தீனர்களும் பேச்சு வார்த்தைகள் முலம் அவர்கள் பிரச்னைக்கு வழி காணவேண்டுமெனக் கோரி னார்கள். ஐ.நா. வும் இதை பலப்படுத்தியது. 1991ல் இதற் கான பேச்சு வார்த்தைகள் ஆரம்பமாயின. 22 மாதங் களுக்குப் பின் இஸ்ரேலும் பாலஸ்தீன விடுதலை இயக்கமும் ஒன்றையொன்று அங்கீகரித்தன. அதன்பின் சமரச ஒப் பந்தம் ஏற்பட்டது.

அமெரிக்க அதிபர்கிளின்டன் இஸ்ரேல் பிரதமர் ராபி னையும் பாலஸ்தீன விடுதலை இயக்கத் தலைவர் அராபத் தையும் வாஷிங்டனுக்கு வரவழைத்து அந்த ஒப்பந்தம் வெற்றிகரமாக நிறைவு பெறச் செய்தார். இப்படியாக நெடுங்கால எதிரிகளாக இருந்த இருதரப்பினரும் நண்பர்க ளாயினர். இது உலகிற்கே ஒரு நல்ல எடுத்துக் காட்டாகும்.





# நேர்மைக்கே பரிசு

வேம்பூரிலுள்ள ரமா என்ற இளம் பெண் தன் பக்கத்து வீட்டில் வசித்து வரும் கோபு என்ற வாலிபனை மணக்க விரும்பினாள். கோபு மிகவும் நல்லவன் கள்ளம் கபடு இல்லாதவன். இதை அறிந்த சுந்தரம் என்பவன் ரமாவைக் கண்டு "கோபு வெறும் அசடு. அவனைக் கல்யாணம் செய்து கொள்ளாதே. என்னை நீ மணந்து கொண்டால் ராஜாத்திபோல சுகமாக நீ வாழலாம்" என்றான்.

ரமாவோ "கோபு ஒன்றும் அசடு இல்லை. மிகவும் புத்திசாலி" எனவே சுந்தரம் "இதைப் பரீட்சிக்கிறாயா? எனக்கும் அவனுக்கும் போட்டி வைத்தால் நான்தான் ஜெயிப்பேன்" என்றான். ரமாவும் கோபுவுக்கும் சுந்தரத்திற்கும் பத்து ரூபாய் வீதம் கொடுத்து "நீங்கள் பட்டணம் போய் எனக்குப் பிடித்த ஒரு பொருளை வாங்கிக் கொண்டு வாருங்கள்" என்றாள்

அவள் தனிமையில் கோபுவிடம் "நீ எதை வாங்கி வந்தாலும் எனக்குப் பிடிக்கும். ஆனால் நீ நேர்மையை மட்டும் விட்டு விடாதே" என்றாள். கோபுவும் சரி என்றான். கோபு எதை வாங்கி வந்தாலும் அது தனக்குப் பிடித்தது என ரமா சொல்லிவிடுவாள் என நினைத்த சுந்தரம் கோபு எதையுமே கொண்டு வராமல் செய்துவிடுவ்து என்று தீர்மானித்துக் கொண்டான். அதற்காக ஒரு மனிதனையும் ஏற்பாடு செய்தான்.

கோபுவும் சுந்தரமும் சேர்ந்தே பட்டணத்திற்குக் கிளம்பினார்கள். கொஞ்சதூரம் போனதும் சுந்தரம் கோபுவிடம் "இங்கே ஒரு

—சிவனார் செல்வன்—



மரத்தில் நான் யாருக்கும் தெரியா மல் ஒரு நூறு ரூபாய் வைத்திருக் கிறேன். அதை எடுத்து வருகி றேன் அதுவரை நீ இங்கேயே இரு'' என்று கூறினான்.

கோபுவும் சரி எனவே சுந்தரம் "இங்கே திருடர் பயம் அதிகம். அதனால் ரமா கொடுத்த பத்து ரூபாயைக் கொடு. நான் எடுத்துக் கொண்டுபோய் பத்திரமாக வைத்து திருப்பி வந்ததும் கொடுக்கி றேன்'' என்றான். கோபுவும் ரமா கொடுத்த பத்து ரூபாயை அவ னிடம் கொடுக்கவே சுந்தரம் அதை வாங்கிக் கொண்டு அங்கிருந்து போனான்.

அதுவரை அவர்களைப் பின் தொடர்ந்து வந்த சுந்தரத்தின் கை யாள் சுந்தரம் போனதும் கோபு வின் முன்போய் நின்று கத்தியைக் காட்டி மிரட்டி அவனிடம் மீத முள்ள பணத்தை எல்லாம் பிடுங் கிக் கொண்டுபோய் சுந்தரத்திடம் கொடுத்தான்.

சுந்தரமும் அந்த ஆளுக்கு ஐந்து ரூபாய் கொடுத்து அனுப்பி விட்டு கோபுவைக் காணத் திரும்பி வந்தான்.

கோபு அவனிடம் நடந்ததைக் கூறி "நல்ல வேளை, ரமா எனக் குக் கொடுத்த பத்து ரூபாய் உன்னி டம் இருந்ததால் அது தப்பியது'' என்றான். இருவரும் பட்டணம் போய் ஒரு நகைக் கடைக்குச் சென் றார்கள். அங்கு சுந்தரம் பேரம் பேசி பத்து ரூபாய்க்கு ஒரு நகையை வாங்கினான்.

கோபு அதேபோன்ற நகையை வாங்க எண்ணி கடைக்காரனி டம் விலை கேட்கவே அவனும் "இது சுந்தரம் ஐயாவுக்குக் கொடுத்த விலைக்கு உங்களுக்குக் கொடுக்க முடியாது. அவரால் எனக்கு எவ் வளவோ நன்மை ஏற்படுகிறது. அதனால் அவருக்கு அந்த விலைக் குக் கொடுத்தேன். அதன் அசல் விலை ஐம்பது ரூபாய்'' என் றான்.

கோபுவிடம் அவ்வளவு பணம் இல்லாததால் அவனால் சுந்தரம் வாங்கியதைவிட விலையுயர்ந்த

பொருளாக வாங்க முடியவில்லை. அப்படியும் கடைக்காரனைச் சொல்ல சொல்லி சுந்தரம் முன்பே பணம் கொடுத்திருந்தான்.

இருவரும் ஊர் திரும்பி வரும் போது சுந்தரம் கோபுவிடம் "நீ உன் பணத்தை எல்லாம் இழந் தாய். எந்த ஒரு பொருளையும் வாங்கவில்லை. இதனால் நீ ரமாவை மணக்க முடியாது. அதனால் நீ ரமாவிடம் நல்லவிதமாகச் சொல்லி அவள் என்னை மணக்கும்படிச் செய்" என்றான். கோபுவும் சரி நீதான் போட்டியில் வென்றதாக அவளிடம் கூறி உன்னை மணக் கும்படிக் கூறுகிறேன்" என்றான்.

இருவரும் தம் ஊர் எல்லையை அடைந்தபோது ஒரு சன்னியாசியை அவர்கள் ஒரு மரத்தடியே பார்த் தார்கள். அவரும் அவர்களை விசாரித்து விவரம் அறிந்து "துரதிஷ்டக்காரர்களுக்கு உதவக் கடவுள் என்னை அனுப்பி இருக் கிறார். கோபுவுக்கு அதிர்ஷ்டம் இல்லை. அதனால் அவனுக்கு இந்த வைர மாலையைக் கொடுக் கிறேன்." எனக் கூறிப் பளபள வென மின்னும் ஒரு மாலையைக் கொடுத்தார். சுந்தரம் திகைத்துப் போனான்.

இருவரும் ரமாவைக் கண்டு தம் பொருள்களைக் கொடுத்த னர். கோபுவின் மாலையைப் புகழ்ந்த ரமா "கோபு நேர்மை யானவன். அதனால்தான் கடவுளே சமயத்தில் வந்து உதவினார்.





இப்போட்டியில் அவனே வென்றான். இது உனக்குத் திருப்தி இல்லை என்றால் இன்னொரு போட்டி வைக்கிறேன்'' என்று சுந்தரத்திடம் கூறினாள்.

மறுநாள் ரமா கொடுத்த பத்து ரூபாய்களுடன் சுந்தரமும் கோபுவும் பட்டணத்திற்குக் கிளம்பினார்கள். ஆனால் வழியில் சுந்தரத்தின் பணத்தைத் திருடர்கள் பிடுங்கிச் சென்றார்கள். கோபுவை எதுவும் செய்யவில்லை.

இருவரும் முன்பு சென்ற நகைக் கடைக்கே சென்றார்கள். கடைக்காரன் கோபுவைப் பார்த்து "உங்கள் முகத்தில் லட்சுமி களை தாண்டவம் ஆடுகிறது. நீங்கள் விலை கொடுக்காமல் கூட என் கடையிலிருந்து எதையும் எடுத்துக் கொள்ளலாம் நீங்கள் அப்படிச் செய்தால் என் அதிர்ஷ்டம் பெருகும்'' என்றான்.

கோபு ஒருநகையை எடுத்துக் கொண்டு தான் அதற்கு ஏதாவது ஒரு சிறுதொகையாவது விலையாக கொடுக்க வேண்டும் என வற்புறுத்திக் கடைக்காரனிடம் பத்துரூபாய் கொடுத்தான். சுந்தரமோ இரகசியமாகக் கடைக்காரனுக்கு அதிகவிலை கொடுத்து அதுபோன்ற நகையை வாங்க முடியவில்லை.

இருவரும் ஊர் திரும்பினர். ஊர்எல்லையில் முன்பு கண்ட சன்னியாசியையே கண்டனர். அப்போது சுந்தரம் அவரது கால்களில் விழுந்து "ஐயா! எனக்கு உதவுங்கள். என் பணத்தை எல்லாம் திருடர்கள் பறித்துக் கொண்டு போய்விட்டார்கள்'' என்றான்.

சன்னியாசியும் சுந்தரத்திடம் "உன்போன்ற துரதிர்ஷ்டக்காரன் உலகில் இல்லை. கடலில் மூழ்குபவனுக்குக் கை கொடுத்தால் அவன் உதவ வந்தவனையும் சேர்த்து கடலுக்குள் இழுத்துக் கொண்டுவிடுவான். கோபு நல்லவன், அதிர்ஷ்டசாலியும் கூட. அப்படிப் பட்டவர்களுக்கே உதவ வேண்டும்'' என கூறி இன்னொரு

வைரமாலையை எடுத்து கோபுவிடம் கொடுத்துவிட்டுப் போனார்.

இருவரும் ரமாவைக் கண்டனர். அவளும் கோபுகொடுத்த மாலையை வாங்கிக் கொண்டு சுந்தரத்திடம் "பார். கோபுவுக்கு அவனது நேர்மை கைகொடுத்தது. உனக்கோ உன் துரதிர்ஷ்டம் தான் மிஞ்சியது. இதுதான் நேர்மைக்கும் நேர்மை இல்லாததற்கும் கிடைக்கும் பரிசு" என்றாள்.

சுந்தரம் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு கிளம்பிய போது ரமா அவனைக் கூப்பீட்டு "இந்த இரண்டு மாலைகளையும் நீ மணக்கப்போகும் உன் மாமன் மகளுக்கே கொடுத்து விடு" என்றாள். அதுகேட்டு சுந்தரம் திகைத்து நிற்கவே ரமாவும் "இது உன் மாமா கொடுத்தப் போலித் தங்கநகைகளே. மேலும் நீ கொடுத்த நகையையும் வாங்கிப் போய் உன் மாமன் மகளுக்கே போடு" என்றாள்.

சுந்தரம் ஆத்திரத்தோடு "யாரோ ஒரு சன்னியாசியை அனுப்பி என்னை ஏமாற்றினாயா?" என்று கேட்கவே "நீ மட்டும் ஆளை வைத்து கோபுவின் பணத்தை நடுவழியில் திருடிச் செல்ல ஏற்பாடு செய்தாயே. அதற்கும் பெயர் என்னவாம்?" என்று கேட்டாள்.

சுந்தரம் திகைக்கவே ரமா "உன் மாமாவுக்கு அந்த ஆள் மிகவும் வேண்டியவன். அவன் உன் வேலைத்தனத்தை அவரிடம் கூற அவர்தான் சன்னியாசி வேடத்தில் வந்து கோபுவுக்கு உதவி உன் திட்டத்தை முறியடித்தார். உன் மாமாவின் மகளோ உன்னை விரும்புகிறாள். அவள் யோசனைப்படி தான் உன் மாமா நடந்தார். அவள் புத்திசாலி. அவளையே நீ மணந்து கொள்" என்றான்.

சுந்தரமும் அவள் கூறியது சரியே என ஏற்றுத் தன் மாமன் மகளையே மணந்து கொண்டான். ரமாவும் தான் விரும்பிய கோபுவை மணந்து கொண்டு சுகமாக வாழ்ந்தாள்.



# பிடித்த காரணம்!

சந்தனபுரி சமஸ்தானத்தில் உத்தியோகம் பெற சந்திரசேகரன் என்ற இளைஞன் தன் ஊரிலிருந்து கிளம்பினான். தலைநகரில் அவனிடம் பலர் சத்தியசீலன் என்ற அதிகாரியைப் பிடித்தால் எளிதில் வேலை கிடைக்கும் என்றும் அந்த அதிகாரிக்குப் பறவைகள் என்றால் மிகுந்த விருப்பம் என்றும் கூறினார்கள்.

சநிதிரசேகரனும் ஒரு கிளியைப் பிடித்து பேசக் கற்றுககொடுத்து அதனை எடுத்துக் கொன்டு சத்தியசீலனைக் கண்டான். கிளியும் அந்த அதிகாரியைப் பார்த்ததும் "நீங்கள் நூறாண்டு காலம் நோய் நொடி இல்லாமல் வாழ்வீர்களாக" எனக் கூறியது. அதைக் கேட்ட அதிகாரி மகிழ்ந்து 'மிக்க நன்றி' எனவே கிளியும் "மிக்க நன்றி" எனக் கூறியது.

சத்தியசீலன் சந்திரசேகரனுக்கு வேலை வாங்கிக் கொடுத்தான். ஒரு வாரம் டுகழிந்ததும் மரியாதைக்காக சந்திரசேகரன் சத்தியசீலனைப் பார்க்கப் போய் போச்சுயவாக்கில் "நான் கொடுத்த கிளி உங்களுக்கு பிடித்திருக்கிறதா?" என்று கேட்டான்.

சத்தியசீலனும்"ஓ! மிகவும் நன்றாக இருந்தது. பறவைகளில் கிளியின் மாமிசம் எனக்கு மிகவும் பிடிக்கும். நீ அதை எனக்குக் கொடுத்தஅன்றே கொன்று அதன் மாமிசத்தைப் பக்குவமாய்க் கறியாக்கிச் சாப்பிட்டு விட்டேன்!" என்றான்






## 7

*[மன்னன் பிரதாபவர்மன் கேட்டுக் கொண்டபடி உத்தமன் அதிசயமலர்களைப் பறித்து வந்தான். படகு தயாராகியது. மலைவாசிகள் தலைவனும் உத்தமனின் தங்கை ரஜனியும் மற்றும் சிலரும் உத்தமனை படகில் அமர்த்தி கடலில் அனுப்பினார்கள். உத்தமன் ராட்சஸ மிருகத்தை தேடியவாறே படகில் தனியாகச் சென்று கொண்டிருந்தான் அப்போது—]*

உத்தமன் அதற்கு முன் படகில் சென்றது இல்லை. அவனது மலைப் பகுதியில் சிற்றாறுகளைத் தவிர வேறு பெரிய நதி என்று எதுவும் கிடையாது. அங்கு பாயும் சித்தராவதி என்ற காட்டாறு தான் சற்றுப் பெரிய ஆறு. அதில் வெள்ளம் வந்தபோது மரக் கட்டைகளைத் தெப்பம் போலக் கட்டி மிதக்கவிட்டு அதில் உட்கார்ந்து பல முறை சென்றிருக்கிறான். படகில் அமர்ந்து நெடுந்தூரம் போவது இதுதான் அவனுக்கு முதல் தடவை.

மாணிக்கபுரியை ராட்சஸ மிருகத்திடமிருந்து காக்க வேண்டும் என்ற வெறியில் அவன் படகில் போய்க் கொண்டிருந்



தான்: கடலில் சற்று தூரம் போன தும் அலைகள் குறைந்தன. இன் னும் கொஞ்ச தூரம் போனதும் கடல் அமைதியாக இருந்தது. அங்கு படகு செல்ல வேண்டு மானால் துடுப்பு வலித்தேயாக வேண்டும். உத்தமனும் துடுப்பு வலித்துப் படகைச் செலுத்தி னான்.

மெதுவாக நாலா பக்கமும் இருள் சூழலாயிற்று. வானவெளி யில் விண் மீன்கள் ஆங்காங்கு மின்னிக் கொண்டிருந்தன. எங் கும் இருட்டாகவே இருந்தது ராட்சஸ மிருகம் எங்கிருந்து எப் போது வெளிவருமோ என்று உத்தமன் பார்க்கலானான். அவ னது படகு மெதுவாகச் சென்று கொண்டிருந்தது.

வெகுதூரம் சென்றபின் அவன் தன்படகின் பின்னால் கருப்பான ஒரு உருவம் இருப்பதுபோல உணர்ந்தான். அவன் திரும்பிப் பார்த்தபோது அது கடலிலிருந்து மேலே வந்து கொண்டிருந்தது. அவன் உடனே படகைத் திருப்பி னான். அந்த உருவம் மிகப் பெரி தாகிக் கொண்டிருக்கவே உத்தம னுக்கு அதுவே ராட்சஸமிருகமாக இருக்க வேண்டும் என்று மனதில் பட்டது.

அதுமெதுவாக நீரில் அடிமேல் அடிவைத்து நடந்து வரலாயிற்று. கடலில் ராட்சஸ மிருகத்தை எதிர்ப்பது சிரமம் என நினைத்த உத்தமன் படகைக் கரைக்கு செலுத் திப் போகத் தீர்மானித்தான். எனவே அவன் படகை வேகமாகக் கரைநோக்கிச் செலுத்தியவாறே தன்பின்னால் ராட்சஸமிருகம் வந்து கொண்டிருக்கிறதா என்று அவ்வப்போது திரும்பிப் பார்த் துக் கொண்டே சென்றான்.

படகிற்குச் சற்று தூரத்தில் அலைகளின் வேகத்திலிருந்து பாறைகள் தென்பட்டன. ஆனால் அங்கே இறங்க முடியாமல் இருந்த தாலும் அலைகள் பாறைகளின் மீது மோதிக் கொண்டிருந்த தாலும் அவனுடைய படகு மேலும் கீழுமாக ஆடலாயிற்று. படகைக்

கட்டுப்படுத்த உத்தமன் மிகவும் சிரமப்பட்டான்.

திடீரென ஒரு பெரிய அலை உயர்ந்து எழுந்தது. அது உத்தமனின் படகை உயரத் தூக்கி எறிந்தது. படகு பாறைகளிடையே உள்ள ஒரு குறுகிய இடுக்கில் போய் விழுந்தது. படகு கவிழ உத்தமன் கரையில் மணல் பகுதியில் தூக்கி எறியப்பட்டான். படகிலிருந்த மலர்க் கட்டுகளும் அவன்மீது விழுந்ததோடல்லாமல் நாலா புறமும் சிதறிப் போயின.



ஒரு நொடியில் நிகழ்ந்த இந்த சம்பவத்தைக் கண்டு உத்தமன் திகைத்துப் போனான். பிறகு சிதறிக் கிடந்த மலர்களை ஒன்று சேர்த்து படகிற்கு எடுத்துச் சென்றான். அவனால் சிதறிப் போன எல்லா மலர்களையும் எடுக்க முடியவில்லை. கொஞ்சம் மலர்கள் கடலில் விழுந்து வெகுதூரம் போய் விட்டன. அவற்றை அவனால் எடுக்க முடியவில்லை.

அதிசய மலர்கள் போதிய அளவில் தன்னிடம் இருப்பதால் ராட்சஸ மிருகம் தன்னை நோக்கி வரும் என உத்தமன் நம்பினான். ஆனால் படகு மிகக் குறுகிய கடல் பகுதியில் அல்லவா இருக்கிறது.! அங்கு எப்படி பெரிய ராட்சஸ மிருகம் வர முடியும்? படகை அங்கிருந்து வெளிக் கொண்டு வந்தால் அதிலுள்ள அதிசய மலர்களுக்காக ராட்சஸ மிருகம் கண்டிப்பாக வரும். ஆனால் அதை எப்படிச் செய்வது என்று அவன் சற்று யோசனை செய்யலானான்.

ராட்சஸ மிருகம் ஒருவேளை வருகிறதா என்று உத்தமன் சுற்றிலும் பார்த்தான். ஆனால் அது வருகிற அறிகுறிகூட இருக்கவில்லை. இப்படியாக இரவு கழிந்து விடியும் வேளை ஆகி விட்டது. அப்போது கடலில் ராட்சஸ மிருகத்தின் முதுகுப்புறத்தை அவன் கண்டான். மன்னன் கூறியது சரியே. அது விடியும்போது கடலுக்குள் போய் விடுவதாகத் தானே கூறினார்.! அது மறுபடி



யும் கடலிலிருந்து வெளியே வருவது இரவில் நன்கு இருட்டிய பிறகுதான். இதற்கு மத்தியில் அது கடலிலிருந்து வெளியே வரவே வராது.

உத்தமன் பாறைகளை அணுகி அங்கு கவிழ்ந்து கிடந்த படகை நிமிர்த்தி வைத்தான். தான் பொறுக்கி எடுத்து வந்த அதிசய மலர்களையும் அம்மலர்ச் செடிகளையும் அந்தப் படகில் வைத்தான். அந்த மலர்களும் சற்றும் வாடாமல் இருந்ததோடு அன்றே மலர்ந்தவை போலவும் புதிதாகவும் இருந்தன.

உத்தமன் அந்த மலர்களையும் மலர்ச் செடிகளையும் பத்திரமாக வைக்க ஏதாவது இடம் இருக்கிறதா என்று பார்க்கலானான். அப்போது நன்கு ஒளிபரவிக் காலையாகிவிட்டது. அவன் ஒரு பாறை மீது அமர்ந்து சற்று இளைப்பாறலானான். சற்று நேரத்தில் அவனை அறியாமலே அவனது கண்கள் மூடிக் கொள்ள, அவன் நன்கு தூங்கிவிட்டான்.

திடீரென சில பெண்கள் சிரிப்பதைக் கேட்டு தூக்கம் கலைந்து அவன் கண்விழித்துப் பார்த்தான். ஆறு இளம் பெண்கள் ஓடி வந்து அவனைச் சுற்றி நின்றனர். அவர்களது ஆடைகளும் அலங்காரங்களும் விசித்திரமாக இருந்தன. தலையிலும் கைகளிலும் மலர்களை மாலைகளாக்கிச் சுற்றிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் அப்பகுதியைச் சேர்ந்த மலைச் சாதியினர் என உத்தமன் ஊகித்துக் கொண்டான்.

அவர்கள் பேசிய மொழி என்ன என்று தெரியவில்லை. புரியவும் இல்லை. அந்த ஆறு பெண்களின் கைகளிலும் அதிசய மலர்கள் இருந்தன. அவர்கள் அவற்றை முகர்ந்து கொண்டே தமக்குள் ஏதோ பேசிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் அந்த மலர்களைக் கீழே வைத்துவிட்டு அங்கிருந்து எப்போது போவார்கள் என்று உத்தமன் எதிர்பார்க்கலானான்.

அவர்கள் அவன் எதிர்பார்த்த



படி மலர்களைக் கீழே வைக்க வில்லை. அதனால் அவன் அவர்களிடம் "நான் இவற்றை மாணிக்கபுரியிலிருந்து கொண்டு வந்தேன். என் மலர்களை என்னிடம் கொடுத்துவிடுங்கள்" என்றான். அவர்களோ மாணிக்கபுரி, மாணிக்கபுரி என்று கிளிப்பிள்ளை போலக் கூறிச் சிரித்தார்கள்.

உத்தமனோ சைகை காட்டி அந்த மலர்களை அவர்கள் அங்கிருந்து தானே எடுத்தார்கள் என்று கேட்டான். 'ஆம்' என்பது போல அவர்கள் தலையை ஆட்டினார்கள். அவன் அவற்றைக் கீழே வைக்கும்படி சைகை காட்டிய போது அவர்கள் முடியாது என்று தலையை ஆட்டினார்கள்.

அவர்கள் மேலும் ஏதோ சொல்ல அது உத்தமனுக்குப் புரியவில்லை. ஆனால் அவனோ "அந்த மலர்களைக் கீழே வைக்கிறீர்களா?" என்று உரக்கக் கூவினான். அவர்களோ சிரித்தார்கள். அவர்களில் ஒருத்தி அவனருகே வந்து நின்று தொலைவில் ஏதோ உள்ளதைக் காட்டி ஏதோ கூறினாள்.

அவள் "அந்த மலர்களை எடுத்துக் கொண்டு எங்கள் இடத்திற்குப் போகப் போகிறோம். நீயும் எங்களோடு வா" என்று சைகையால் கூறினாள். மற்றவர்கள் உடனே கிளம்பவே உத்தமனும் அவர்களோடு போய்த் தான் பார்க்கலாமே என எண்ணிக் கிளம்பிவிட்டான்.

அவன் தன் படகைப் பார்த்த போது அதில் ஒரு அதிசய மலர் கூட இல்லாது போனதைக் கண்டான். மலர்ச் செடிகளே இருந்தன. அவன் மறுபடியும் அலைகள் அடித்துப் படகை இழுத்துப் போய் விடுமோ என்று பயந்து அதனை பத்திரமான ஒரு இடத்தில் இழுத்து வைத்தான். செடிகளை அங்கு விட்டுச் செல்லக் கூடாது என எண்ணி அவன் அவற்றை எடுத்துக் கொண்டான். துடுப்பை படகினுள் பத்திரமாக வைத்தான். அதன் பிறகு அவன் அப்பெண்

கள் நின்ற இடத்திற்குச் சென்றான்.

கொஞ்ச நேரத்திற்குப் பின் அவர்கள் மணல் பரப்பைக் கடந்து செம்மண் பகுதியை அடைந்தார்கள். சுற்றிலும் மலைகளைக் கொண்டு பள்ளத்தாக்கில் அது இருந்தது. மரம் செடிகளோடு பச்சைப் பசேலென விளங்கிய போதிலும் அங்கு உயரமான மரங்கள் இல்லை. அவர்கள் ஒரு கிராமத்தை அடைந்தார்கள். ஆனால் அங்கு குடிசைகள்தான் இருந்தன. அவற்றிலிருந்து வெளியே வந்த பெண்கள் அந்த இளம் பெண்களிடம் ஏதோ கேட்டார்கள். அவர்களும் ஏதோ ஒரு வார்த்தையை பதிலாகக் கூறிவிட்டு ஒரு பெரிய குடிசையை நோக்கிச் சென்றார்கள்.

அதன் வாசலில் அப் பெண்கள் நின்று "அம்மா! நாங்கள் என்ன கொண்டு வந்திருக்கிறோம் என்பதை வெளியே வந்து பாருங்கள்" என்று உரக்கச் சொன்னார்கள். அப்போது நாற்பது வயது மதிக்கத்தக்க ஒரு பெண்மணி வந்து உத்தமனைப் பார்த்துவிட்டு "யார் இவன்? மிகவும் அழகாக இருக்கிறானே! நறுமணம் கமழ்கிறதே" என்று கேட்டாள்.

அப்பெண்களும் "நாங்கள் கடற்கரைக்குப் போனபோது அங்கு இவன் தூங்கிக் கொண்டிருந்தான். இவனருகே ஒரு படகும் அதில் இந்த மலர்களும் இருந்தன. இவற்றை இவன் நமக்காகக் கொண்டு வந்திருக்கிறான் என்று எண்ணி இவனையும் அழைத்து வந்தோம். இவன் மாணிக்கபுரியிலிருந்து வந்திருக்கிறான். இவனுக்கு நாம் பேசுவதும் புரியவில்லை. இவனுக்கு நாம் சொல்வதும் புரியவில்லை" என்று சொன்னார்கள்.



அதுகேட்டு அந்தப் பெண்மணி "சரி. நம் காயாம்பூ வரட்டும். அவன் இவனோடு பேசினால் விவரம் அறியலாம். இனி நீங்களெல்லாம் உள்ளே போங்கள்" என்றாள். அந்த ஆறு இளம்

பெண்களும் அந்தக் குடிசைக்குள் சென்றனர். அந்தப் பெண்மணி யும் உத்தமனை உட்காரச் சைகை காட்டிவிட்டு உள்ளே சென்றாள்.

அந்தக் குடிசையைப் பார்த்த உத்தமன் அது அங்கு வாழும் மலைச் சாதியினரின் தலைவனுடைய தாகத்தான் இருக்கும் என்று ஊகித் துக் கொண்டான். உள்ளே போன பெண்மணி ஒரு வாயகன்ற பாத் திரத்தில் ஏதோ ஒரு பானத்தைக் கொண்டு வந்து உத்தமனுக்குக் குடிக்கக் கொடுத்தாள். அவனும் அதனைக் குடித்துவிட்டு பாத்தி ரத்தைக் கீழே வைத்தான்.

அவன் அந்த இளம் பெண்கள் எடுத்துச் சென்ற அதிசய மலர்கள் என்ன ஆகுமோ என்று கவலைப் படலானான். இங்குள்ள அதிசய மலர்களால் கவரப்பட்டு ராட்சஸ மிருகம் இங்கு வந்தால் என்ன செய்ய வேண்டும்? அந்தக் குடி இருப்பைச் சுற்றி பலமான கற் சுவர் கோட்டை மதில் போலத் தான் இருந்தது. அதில் சிறு வழி களும் இருந்தன. ராட்சஸ மிருகம் இவ்வழிகளில் வர முடியாது. ஒரு வேளை கடலில் விழுந்த அதிசய மலர்களால் அது திருப்தி அடைந்து வராமல் இருந்தும் விடலாமே.

இப்படி ஏதேதோ அவன் யோசித்துக் கொண்டிருக்கையில் யாரோ அவன் முதுகைத் தட்டவே அவன் திரும்பிப் பார்த்தான். அங்கு வாட்ட சாட்டமான ஒருவன் இருந் தான். அவன் உத்தமனைப் பார்த்து "யார் நீ? என்று கேட்டான்.

உத்தமனும் "நான் மாணிக்கபுரி யைச் சேர்ந்த மலைச் சாதியி னன். என் பெயர் உத்தமன்" என் றான். அந்த மனிதனும் "மாணிக்க புரி மலைச்சாதியினனா! சரி வா உள்ளே போகலாம்" என்று உத் தமன் பேசிய மொழியில் கூறவே உத்தமனும் மகிழ்ந்து போனான்.

(தொடரும்)






## மதியூக மன்னனே!

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கி செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! இந்த பயங்கர நடு நிசியில் நீ விடாமல் முயன்று ஏதோ ஒரு வேலையில் ஈடுபட்டிருப்பது பாராட்டத்தக்கதே. ஆனால் சிலர் சில சமயங்களில் எதிர்பார்க்கும் செயலைச் செய்யாமல் நேர்மாறான செயலைச் செய்கிறார்கள். இதற்கு உதாரணமாக விசித்திர வர்மன் என்ற மன்னனின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கதை சொல்லலாயிற்று.

விசித்திரவர்மன் விரிஞ்சிபுர

## வேதாளம் சொல்லும் கதை



மன்னன். அவன் திறமைசாலி எனப் பட்டம் தரித்த ஒரிரு ஆண்டுகளுக்குள்ளேயே பெயரும் பெற்றுவிட்டான். அவன் மணந்த ரேவதியும் அழகியும் புத்திசாலி யுமே.

விரிஞ்சிபுரத்திற்குப் பக்கத் தில் ஒரு காடு இருந்தது. அங் கிருந்த காளி கோவிலில் காளி தேவியை வழிபட வருடத்தில் ஒரு முறையாவது விரிஞ்சிபுர மன் னன் தனியாகச் சென்று வருவது அந்த அரச குடும்பத்தின் வழக் கம்.

அந்த வழக்கப்படி ஒருநாள் விசித்திரவர்மன் காளிதேவியை வழிபடக் காட்டிற்குள் சென் றான். அவன் குதிரை மீதேறிப் போய்க் கொண்டிருக்கும்போது ஒரு பெண் அலறிக் கூக்குரலிட் டது அவன் காதில் விழுந்தது. விசித்திரவர்மன் தன் குதிரையை அக்குரல் வந்த திசையை நோக்கிச் செலுத்தினான்.

அங்கு ராட்சஸன் ஒருவன் மலைச் சாதிப் பெண் ஒருத்தி யைப்பிடித்து விழுங்கப் போவ தைக் கண்டான். உடனே அவன் குதிரையிலிருந்து இறங்கி தன் வாளை உருவி "அடே ராட்சஸா! ஒரு சாதாரண மானிடப் பெண் ணிடமா உன் கைவரிசையைக் காட்டுகிறாய்? எங்கே என்னை விழுங்கு பார்க்கலாம்" என்று உரக்கக் கூறினான்.

ராட்சஸன் விசித்திரவர்மனை அலட்சியமாகப் பார்த்து "நீயா என் னோடு சண்டைபோட்டு வெற்றி பெறப்போகிறாய். போ, போ" என்று கூறினான். விசித்திரவர் மன் அவன் மீது பாயப் போகவே ராட்சஸன் பலமாகச் சிரித்த வாறே மலைச் சாதிப் பெண்ணை விட்டு விட்டு விசித்திரவர்மனி டம் "நீ மனிதன் நான் ராட்சஸன். எனவே சண்டை சமமானவர்களி டையேதான் நடக்க வேண்டும். நானும் மனிதன் உருவாகி வரு கிறேன் அதுதான் முறை." எனக் கூறித் தன் பெரிய பயங்கர உரு வைக் குறுக்கிச் சாதாரண மனி

தன் போலாகிவிட்டான்.

அது கண்டு விசித்திரவர்மன் ஆச்சரியப்படவே ராட்சஸன் "சரி சரி, என்னோடு மற்போர் புரி பார்க்கலாம்" என்று சவால் விடுத்தான். விசித்திரவர்மனும் தன் கத்தியைக் கீழே வைத்து விட்டு அவனுடன் மற்போர் புரிலானான். ராட்சஸன் மற்போரில் முறையான பயிற்சி பெறாதவன். விசித்திரவர்மனோ அதில் நன்கு பயிற்சி பெற்றவன். அதனால் அவன் ராட்சஸனை விரைவில் களைத்துப் போகச் செய்து அவனது மார்பில் ஓங்கி ஒரு குத்து விட்டான்.



ராட்சஸன் 'ஓ'வெனக் கத்திக் கொண்டே கீழே விழுந்தான். அவன் விசித்திரவர்மனைப் பார்த்து "நீ தைரியசாலி மட்டுமல்ல, பலசாலியும்கூடத்தான்" என்று கூறி விட்டு மாயமாய் மறைந்தான்.

அப்போது மலைச்சாதிப் பெண் மன்னனின் கால்களில் விழுந்து "வீரரே! என் பெயர் சிகப்பி. மலைச்சாதியினரின் தலைவரின் மகள் நான். காட்டில் மலர் பறிக்க வந்தேன் ராட்சஸனை வென்ற உங்களைப் போன்ற வீரர் யாருமே இல்லை" என்றாள்.

காட்டு மலர்களையும் பாசி மணிகளையும் அணிந்து அழகாக விளங்கும் சிகப்பியைப் பார்த்த மன்னன் பிரமித்து நின்றான். சற்று நேரத்திற்குப் பின் அவன் சிகப்பியிடம் "பெண்ணே! இப்போது நான் காளிகோவிலுக்குப் போய்க் கொண்டிருக்கிறேன். நீ உன் வீட்டிற்குப் போகலாம்" என்றான். ஆனால் சிகப்பியோ மன்னன் பின்னாலேயே காளி கோவிலுக்குச் சென்றாள். மன்னன் காளியை வழிபட்டபோது சிகப்பியும் பிரார்த்தனை செய்தாள். இருவரும் கோவிலிருந்து வெளியே வந்தனர்.

சிகப்பி தன்னிடம் ஏதோ சொல்ல முயல்வதைக் கண்ட மன்னன் "நீ என்னிடம் ஏதோ கேட்க விரும்புகிறாய். தாராளமாகக் கேள். நான் இந்நாட்டு மன்னன்"



அலைந்தேன் தெரியுமா?'' என்றான்.

சிகப்பி அந்த வாலிபனிடம் நடந்ததை எல்லாம் கூறி ''ராட்சஸனிடமிருந்து என்னைக் காப்பாற்றிய இவர் இந்நாட்டு மன்னர்.'' என்றான். வாலிபன் மன்னனை வணங்கி ''அரசே! சிகப்பியைக் காப்பாற்றி எனக்குப் பேருதவி செய்தீர்கள். சிகப்பி என் முறைப் பெண். அவளை நான் மிகவும் விரும்புகிறேன். ராட்சஸன் மட்டும் இவளை விழுங்கி இருந்தால் நான் தற்கொலை செய்து கொண்டிருப்பேன். அவளில்லாமல் நான் இல்லை'' என்றான்.

அது கேட்டு மன்னன் சிரித்தவாறே ''அப்படியா! நீ சிகப்பியை மிகவும் விரும்புகிறாய். ஆனால் அவள் என்னை விரும்புகிறாளே'' என்றான். அது கேட்ட வாலிபன் கலவரப்பட்டு ''என்ன சிகப்பி! இது உண்மையா?'' என்று கேட்டான். சிகப்பியும் 'ஆம்' என்பதுபோலத் தலை ஆட்டினாள்.

மன்னன் ஒருபெரு மூச்சு விட்டு அந்த வாலிபனிடம் ''இந்தப் பிரச்னையைத் தீர்க்க ஒரே வழிதான் உள்ளது. நான் மற்போரில் ராட்சஸனைத் தோற்கடித்தேன். ஆனால் உன்னைத் தோற்கடிக்க வில்லையே. நீ மட்டும் மற்போரில் என்னைத் தோற்கடித்

என்றான். அதைக் கேட்ட சிகப்பி கல்லாய்ச் சமைந்து போனாள். பிறகு அவள் ''நீங்கள் மன்னர் என இதுவரை எனக்குத் தெரியவில்லை. சாதாரணப் போர்வீரர் என்று நினைத்துவிட்டேன். அதனால் தான் காளி தேவியிடம் நான் உங்களையே என் கணவராக அருளும்படி வேண்டிக் கொண்டேன்'' என்றாள்.

அதைக் கேட்ட மன்னன் திடுக்கிட்டான். அவன் அதற்கு பதிலளிக்குமுன் அங்கு இருபத்தைந்து வயதான மலைச்சாதி வாலிபன் அங்கு வந்தான். அவன் ''சிகப்பி! நீ இங்கேதான் இருக்கிறாயா? உன்னை எங்கே எல்லாம் தேடி

தால் சிகப்பி உன்னை மணந்து கொள்வாள். சம்மதமா?'' என்று கேட்டான். அந்த வாலிபன் சரி என்றான். மன்னன் சிகப்பியைப் பார்க்கவே அவளும் தனக்கு அது சம்மதமே என்றாள்.

மன்னன் வாலிபனுடன் மற் போர் புரியலானான். நாலைந்து நிமிடங்கள் நடந்த அப்போரில் மன்னன் நன்கு அடிபட்டுக் கீழே விழுந்து தன் நினைவையே இழந் தான். சற்று நேரத்திற்குப் பிறகே மன்னன் தன் நினைவை அடைந் தான்.

அப்போது அவன் ''சிகப்பி! நான் தோற்றுப்போனேன். நீ இந்த வாலிபனையே மணந்து கொண்டு சுகமாக வாழ்'' எனக் கூறிவிட்டுத் தன் குதிரை மீதேறி அங்கிருந்து தலைநகருக்குச் சென் றான்.

இதற்குச் சில நாட்களுக்குப் பின் தன் பிறந்த நாள் கொண் டாட்டத்தின்போது மற்போர் போட்டி ஒன்றை விசித்திர வர் மன் வைத்தான். அதில் கலந்து கொண்ட சிகப்பியை மணந்த வாலிபனே எல்லோரையும் தோற் கடித்து முதலாவதாக வந்தான். அப்போது விசித்திர வர்மனே மைதானத்தில் இறங்கி அந்த வாலி பனுடன் மற்போர் புரியத் தயா ரானான்.

மன்னனின் இந்த செயல் போட் டியைக் காணவந்திருந்த சிகப்பி யையும் மற்றவர்களையும் ஆச்சரி






யத்தில் ஆழ்த்தியது. அதில் தன் கணவனே வெற்றி பெறுவான் என சிகப்பி நம்பி இருந்தாள். ஏனெனில் முன்பு அவனுடன் மற் போர் புரிந்த மன்னன் தோற்றுத் தானே போனான். அதனால் இம்முறையும் மன்னன் தோற்பான் என அவள் நினைத்தாள். ஆனால் விசித்திர வர்மன் மிக எளிதில் அந்த வாலிபனை மற்போரில் தோற்கடித்துவிட்டான்.

வேதாளம் இக்கதையைக் கூறி "மன்னனே! விசித்திரவர்மன் சிகப் பியின் விஷயத்தில் நடந்து கொண் டது சரிதானா? அவன் அவளைக் காட்டில் பார்த்தபோது அவளது அழகைக் கண்டு பிரமித்து நின் றான். அவன் மனதில் அப்போது அவளை மணந்து கொள்ள வேண் டும் என்ற எண்ணமே கண்டிப் பாக ஏற்பட்டது என்பது தெளிவு. ஆனால் மலைச்சாதி வாலிபன் வந்து சிகப்பி மீது தான் கொண்ட ஆசையைக் கூறியதும் மன்னன் ஏன் தன் மனதை மாற்றிக் கொண் டான்? அவனது வீரம் பற்றி ராட் சஸன் யோசித்து தன் உருவை மனிதனின் அளவுக்கு மாற்றிக் கொண்டு விசித்திரவர்மனுடன் மற்போர் புரிந்ததால்தானே மன்ன னால் அவனை வெல்ல முடிந்தது! ஆனால் எல்லோரையும் மற்போர் போட்டியில் வென்ற மலைச் சாதி வாலிபனை மற்போர் புரிந்து மன்னன் அவனைத் தோற்கடித் தானே. இதற்குக் காரணம் அந்த வாலிபன் சிகப்பியை மணந்து கொண்டுவிட்டானே என்ற ஆத்தி ரத்தாலா? என் இந்த சந்தேகங் களுக்கு நீ சரியான விடை தெரிந் திருந்தும் கூறாவிட்டால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகி விடும்" என்றது.

அதற்கு விக்கிரமனும் "விசித் திரவர்மனின் பல செயல்களைத் தனித்தனியாக பரிசீலித்துப் பார்க் கக் கூடாது. அவற்றிற்குள்ள தொடர்பையும் கொண்டே பார்க்க வேண்டும். காட்டில் ராட்சஸன் சிகப்பியைத் துன்புறுத்த முயன்ற போது பயங்கரப் பெரிய உருவில்

இருந்த அவனை எதிர்க்க மன்னன் தன் வாளை உருவினானன். இத னால் அவன் மாபெரும் -வீரன் என்பது தெளிவாகிறது. ராட்ச ஸன் தன் உருவைச் சிறிதாக்கிக் கொண்டது அவன் தர்ம நியாய மாகப் போர்புரிய வேண்டும் என் பதற்காகத்தான். ஒரு பெண் அழ காக இருக்கிறாள் என்று மன்னன் பார்த்தால் அது அவன் அவளை மணந்து கொள்ளத்தான் அப் படிப் பார்த்தான் என்று சொல்லி விட முடியாது. அவன் அப்படி நினைத்திருந்தால் சிகப்பியை அடைய மலைச் சாதி வாலிபனை மிக எளிதில் தோற்கடித்திருப் பான். தான் மாபெரும் வீரன் என சிகப்பி எண்ணியதைப் போக் கவே அவன் வேண்டுமென்றே அந்த வாலிபனிடம் தோற்றான். இதற்குப் பிறகு அதே வாலிபனை வேறொரு போட்டியில் எதிர்த்து மிக எளிதில் மன்னன் தோற்கடித் தான். அப்போட்டியில் அந்த வாலி பன் வென்றான் என மன்னன் பரிசளித்திருந்தால் அவன் எல்லோ ரிடமும்தான் மன்னனயே தோற் கடித்தவன் என பெருமை அடித் துக் கொண்டே இருப்பான். ஒரு நாட்டு மன்னனுக்கு இதைவிடப் பெரிய அவமானம் வேறு என்ன இருக்க முடியும்? அதனால்தான் விசித்திரவர்மன் அந்த மலைச் சாதி வாலிபனை மற்போரில் தோற்கடித்து அவன் வாயை அடைத்துவிட்டான். இதை எல் லாம் கொண்டு பார்த்தாலே விசித்திரவர்மனின் மேன்மை தெரி யும்'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலை யவே அவன் சுமந்து வந்த உட லோடு வேதாளம் உயரக் கிளம்பி மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# நூற்றுக்கு நூறு உண்மை!

வீரசிம்மன் என்ற ஜமீன்தாரர் கஜராஜன் என்ற மற்றொரு ஜமீன்தாரருடன் சதுரங்கம் விளையாடிக் கொண்டிருந்தார். வீர சிம்மன் சற்று மந்த புத்தி உடையவர். அப்போது கேசவன் என்ற மாவுத்தன் அங்கு வந்து வீரசிம்மனிடம் "ஐயா! என்னிடம் ஒரு யானை இருக்கிறது. அதைக் காப்பாற்ற என்னால் முடியவில்லை. நீங்கள் விலை கொடுத்து வாங்கிக் கொள்ளுங்கள்" என்று வேண்டினான்.

அப்போது கஜராஜன் "யானை இருந்தாலும் ஆயிரம் பொன். இறந்தாலும் ஆயிரம் பொன். உயிருடன் இருக்கும்போது அது நமக்கு பல வேலைகளைச் செய்யும். இறந்தாலோ அதன் தந்தம் ஆயிரம் பவுனுக்கும் மேலாக விலைபோகும். எனவே யானையை வாங்கிவிடுங்கள்" என்றார். வீரசிம்மனும் அப்படியா? நீன்கள் சொன்னால் சரி என்று கூறி யானையை ஆயிரம் பவுன்கள் கொடுத்து வாங்கினார்.

சில நாட்கள் கழிந்தன. மறுபடியும் கஜராஜன் வீரசிம்மனைச் சந்தித்தபோது சிலர் இறந்துபோனயானையை இழுத்துப் போவதைக் கண்டார். வீரசிம்மன் தன் நண்பரிடம் இது பெண் யானை இதற்கு தந்தம் இராது என ஏன் அன்று நீங்கள் கூறவில்லை? ஆனால் நீங்கள் கூறிய யானை இருந்தாலும் ஆயிரம் பவுன் இறந்தாலும் ஆயிரம் பவுன் என்பது முற்றிலும் உண்மை. இது இருந்தபோது செலவு ஆயிரம் பவுன். இறந்த பிறகு இழுத்துப் போய்ப் புதைக்கவும் செலவு ஆயிரம் பவுன் என்றார். பெருமூச்சு விட்டவாறே.



# அம்புலிமாமா அனுபந்தம்—60

நம் நாட்டுப் பறவைகளும், மிருகங்களும்:

## 'யாக்' மாடுகள்

'யாக்' எனப்படும் மலை மாடுகள் நம் நாட்டில் காஷ்மீரிலிருந்து சிக்கிம் வரை பரவியுள்ள இமயமலைப் பகுதியில் உள்ளன. இவை உருவில் சாதாரண மாடுகளைவிடப் பெரிதாயும் மிகவும் பலமுள்ளவையாயும் உள்ளன. இவை 17 செ. மீ. லிருந்து 185 செ. மீ. உயரமிருக்கும். மலைகள் மீது சிரமமில்லாமல் ஏறும். இவை கடல் மட்டத்திலிருந்து 4300-6000 மீட்டர் உயரத்தில்தான் வாழும். கருப்பாக உள்ள இவற்றின் உடலில் நீண்ட ரோமங்கள் இருக்கும். இந்த ரோமங்களே கடுங் குளிரிலிருந்து இவற்றைக் காக்கின்றன.

முன்பெல்லாம் காடுகளில் மட்டும் இவை இருந்தன. இப்போது வீடுகளிலும் இவற்றை வளர்க்கிறார்கள். இவை மூட்டைகளைச் சுமந்து கொண்டு மலைமீது செல்லப் பயன்படுகின்றன.

இவை சிறுசிறு கூட்டமாய்ச் சேர்ந்தே வாழ்கின்றன. இவற்றில் கலப்பு இனமும் உண்டு. அவற்றை மத்யூன் எனக் கூறுகிறார்கள்.






# அவனீந்திரநாத் டாகூர்

"அழகிய இயற்கைக் காட்சிகளைச் சித்தரிக்க நீங்கள் ஏதாவது பூங்காவிலோ ஆற்றின் கரையிலோ அமர்ந்து அங்குள்ள செடி, கொடி, மலர்களைக் கவனித்து சித்தரிப்பதை நான் கண்டிருக்கிறேன். இயற்கையின் அழகை இவ்வளவு எளிதாக நீங்கள் சித்தரிக்க முயல்வது எனக்கு ஆச்சரியத்தையே அளிக்கிறது. அழகு என்பது வெளிப்புறத்தில் காண்பது மட்டுமல்ல. அது இதயத்தைத் தொடுவதாக இருக்கவும் வேண்டும் என்பதை நீங்கள் உணர வேண்டும். மகாகவி காளிதாசரின் படைப்பில் உங்கள் மனதைச் செலுத்தி வான வெளியைப் பாருங்கள். இராமாயணத்தின் முதற் கவி வால்மீகி நீலக் கடலை வர்ணித்துள்ளதை கவனமாகப் படியுங்கள். அதன் பிறகு இக்காட்சிகளை வரையுங்கள்.

பிரபல ஓவியரான அவனீந்திரநாத் டாகூர் தம் சீடர்களுக்கு அளித்த அறிவுரை இது. இதிலிருந்து அவர் ஓவியக் கலையை எப்படி மதிக்கிறார் என்பது தெரிகிறது.



நம் கலாசாரப் பண்பாட்டை நன்கு புரிந்து கொண்டு தீட்டும் ஓவியங்கள் தத்ருபமாக இருக்கும் என்பதே அவரது அபிப்பி ராயம்.

கவியரச்ர் ரவீந்திரநாத டாகூரின் சகோதரரின் மகன்தான் அவ்னீந்திர நாத் டாகூர். டாகூரின் குடும்பத்தவர் பல துறைகளில் உலகப் புகழ் பெற்றவர்கள். அவனீந்திரர் 1871ல்

பிறந்தார். ஆரம்ப காலத்தில் அவர் ஆங்கிலேய, இத் தாலிய ஓவியர்க ளின் முறைகளால் கவரப்பட்டார். அச் சமயம் ஹெச். பி. ஹோவல் இந்தி யக் கலைப் பொக் கிஷத்தை உலகத் தவரும். ஏன் இந்தி யர்களும் கூட நன்கு உணரச் செய்தவர் ஆவார். அவனீந் திநாத் இவரது அறி முகம் பெற்றார்.



அப்போது முதல் அவனீந்திரர் இந் திய ஓவியக் கலை யின் சிறப்பை உணர்ந்து இதில் உயர்வு பெற முயன் றார். மேற்கத்திய பாணியுடன் இந் திய முறையையும் கூட்டி அதற்கே சிறப் பிடம் அளித்த ஓவியங்களைத் தீட் டலானார்.

அவர், இந்தியன் சொஸைடி ஆப் ஓரியண்டல் ஆர்ட்ஸ்' என்ற நிறுவனத்தை நிறுவினார். அவர் வாயிலாக தற்காலப் பல இந்திய ஓவியர் கள் தூண்டப்பட்டுப் புகழ் பெற்றனர். அவர்களில் நந்தலால் போஸ் ஒருவராவார்.

1951ல் அவனீந்திரநாத் டாகூர் இயற்கை எய்தினார்.

# உங்களுக்குத் தெரியுமா?

1. நம்நாட்டில் மாநிலங்களில் சீரமைப்பு எப்போது ஏற்பட்டது?
2. கடந்த பத்து ஆண்டுகளாக அணு ஆயுதமே இல்லாத நாடாக இருந்து வருவது எது?
3. பஞ்ச தந்திரக் கதைகள் எந்த மன்னரின் காலத்தில் தொகுக்கப்பட்டது?
4. இயற்கை உலக நதியைச் சின்னமாகக் கொண்ட பிராணி எது?
5. நம் நாட்டில் ரயில்ப் பெட்டிகளைத் தயாரிக்கும் தொழிற்சாலை எங்குள்ளது?
6. மிகக்குறைவாய் சுற்றுப்புறச் சூழலை மாசு படுத்தும் வாகனம் எது?
7. நிலக்கரி சுரங்கங்கள் நம் நாட்டில் எந்த மாநிலத்தில் அதிகமாக உள்ளன?
8. ப்ளுசீப் என்றால் என்ன?
9. இந்திரனின் தலைநகர் எது?
10. ஈரானில் ஆயதுல்லா கோமானி எப்போது ஆட்சியைக் கைப்பற்றினார்?
11. நம் நாட்டில் நூறாண்டுகளுக்கு மேலாக இருந்து வெளி வரும் வாரப் பத்திரிகைகள் எவ்வளவு?
12. "வெள்ளையனே வெளியேறு' என்ற கோஷம் எப்போது எழுப்பப்பட்டது?
13. தேவ நாகரிலிபியில் நாணயங்களை வெளியிட்ட முதலாவது முஸ்லீம் மன்னர் யார்?
14. ஐரோப்பாக் கண்டத்தில் மிகப் பெரிய நதி எது?
15. பசுமைப் புரட்சி என்பது நம் நாட்டில் குறிப்பாக எந்தப் பயிர் விளைச்சலைக் குறிப்பிடுகிறது?
16. கிரகங்களில் மிகப் பெரியது எது?

## விடைகள்

1. 1956ல்
2. நியூஜிலாந்து
3. சந்திரகுப்த விக்கிரமாதித்தன் காலத்தில்
4. 'சாண்டா'
5. சென்னையிலுள்ள பெரம்பூரில்
6. சைக்கிள் வண்டி
7. பீஹார்
8. நன்கு நடைபெற்று முன்னேறிய கம்பெனி பங்கு (ஷேர்)
9. அமராவதி
10. 1979ல்
11. 36.
12. 1942 ஆகஸ்டில்
13. ஷேர் ஷா
14. வால்கா நதி
15. கோதுமை
16 வியாழன் (பூமியைவிட 11 மடங்கு பெரிது)




# மூளைக்கு வேலை!

ஜெயவீரர் என்ற ஜமீன்தாரருக்கு அவரது விவசாய வேலைகளையும் வீட்டு வேலைகளையும் கவனித்து மேற்பார்வையிட திறமைமிக்க ஒருவன் தேவைப்பட்டது. இதுபற்றி அவர் தன் திவானிடம் யோசனை கேட்டார்.

திவானும் ''இதற்கு முன் இந்த வேலையைப் பராங்குசம் என்பவன் பார்த்து வந்தான். அவன் திறமைமிக்கவன். இந்த வேலையை அவன் மகன் கங்காதரனுக்குக் கொடுக்கலாம்'' என்றார். மறுநாள் கங்காதரன் ஜமீன்தாரரைக் கண்டு தன் தந்தை பார்த்து வந்த வேலையைத் தனக்குக் கொடுக்கும்படி வேண்டினான்.

ஜமீன்தாரர் அவனைப் பரீட்சித்துப் பார்க்கத் தீர்மானித்துக் கொண்டார் அதனால் அவர் ''உனக்கு ஒரு சிறு வேலை கொடுக்கிறேன். அதைச் செய்தபின் உன்னை வேலையில் சேர்த்துக் கொள்கிறேன்'' என்றார். கங்காதரனும் ''என்ன செய்ய வேண்டும்?'' எனவே அவரும் ''நீ நாளைக்கு மறுநாள் வா. அந்த வேலையைச் சொல்கிறேன்'' என்றார்.

இரண்டு நாள்கழித்து கங்காதரன் ஜமீன்தாரரைப் பார்த்தான். அவரும் ''இன்று மாலை என் பெண் தன். புகுந்த வீட்டிற்குப் போகப் போகிறாள். அவளுடைய ஒரு நகையில் சில மாறுதல்கள் செய்து இன்று மாலைக்குள் நீ கொண்டு வரவேண்டும். நான் எப்போதும் நகைகள் செய்யக் கொடுக்கும் கடையில் முகவரியைத் தருகிறேன் என்று கூறினார்.

ஜமீன்தாரர் கூறிய நகைக் கடை அருகிலுள்ள பட்டணத்தில் இருந்தது. கங்காதரன் ஜமீன்தார

—குரு. ரம்யா—



**கத்தில் வைத்துக் கொள்ள முடியும்? நீ என்ன பெயர் சொன்னாய்? ஜெயவீரரா? சரியாக ஞாபகத்திற்கு வரவில்லையே?! சரி, இந்த நகையை எங்கள் கடையில் வாங்கி இருந்தால் நாங்கள்** ரசீது கொடுக்கிருப்போமே! அ... இருக்கிறதா?'' எனக் கேட்டார்

கங்காதரன் ''என்னிடம் ஜமீன்தாரர் ரசீது கொடுக்கவில்லை'' எனவே கடைக்காரரும் ''அப்படியானால் நான் எதுவும் செய்வதற்கில்லை'' என்றார். அப்போது கங்காதரன் சற்று யோசித்து ''நான் இந்த நகையை விற்கிறேன். நீங்கள் வாங்கிக் கொள்கிறீர்களா?'' என்று கேட்டான். நகைக் கடைக்காரும் ''ஓ! இதுதானே என் தொழில்'' எனக் கூறி நகைகளை வாங்கிக் கொண்டு விலையைக் கொடுத்தார்.

பணத்தை வாங்கிக் கொண்ட கங்காதரன் சற்று தூரம் போய் விட்டுத் திரும்பி வந்து நகைக் கடைக்காரரிடம் ''ஐயா! நான் ஏதோ ஒரு ஞாபகத்தில் நகையை விற்பதாகக் கூறி விற்றேன். ஆனால் அதை வாங்கிக் கொள்கிறேன். ஆனால் ஒரு சில மாற்றங்களைச் செய்து கொடுக்க வேண்டும்'' என்றான். கடைக்காரரும் மகிழ்ந்து ''ஓ இன்னும் ஒரு மணி நேரத்தில் செய்து கொடுக்கிறேன். ஆனால் நீ என்னிடமிருந்து வாங்கிக்

ரின் மகளிடம் நகையில் செய்ய வேண்டிய மாறுதல்களை எல்லாம் கேட்டுத் தெரிந்து கொண்டு நகையுடன் பட்டணத்திற்குச் சென்றான். அங்கு ஜெயவீரரின் வாடிக்கைக் கடைக்குப் போய் கடைக்காரரைக் கண்டு தான் ஜமீன்தாரர் ஜெயவீரரிடமிருந்து வந்திருப்பதாயும் அக்கடையில் செய்யப்பட்ட நகையில் சில மாற்றங்கள் செய்து அன்று மாலைக்குள் எடுத்துச் சென்றாக வேண்டும் என்று கூறினான்.

நகைக் கடைக்காரரோ'' என் கடைக்கு எவ்வளவோ ஜமீன்தாரர்கள் வருகிறார்கள். எல்லோர் பெயரையுமா நான் ஞாப

கொண்ட பணத்தோடு இருநூறு ரூபாய் சேர்த்துக் கொடுக்க வேண்டும். என்றார்.

கங்காதரனும் "ஓ கொடுகிறேன்" எனவே கடைக்காரரும் அவனிடமிருந்து பணத்தை வாங்கிக் கொண்டு அவன் விற்ற நகையில் அவன் விரும்பிய மாறுதல்களை ஒரு மணி நேரத்திற்குள் செய்து கொடுத்தார். பிறகு அவர் "இது என் கடையில் நீங்கள் வாங்கிய நகையாதலால் உடனே மாறுதல்களைச் செய்து கொடுத்தேன். சாதாரணமாக இந்த மாதிரி மாறுதல்கள் செய்யப் பதினைந்து நாட்கள் அவகாசம் கேட்பேன். நீங்கள் நகை வாங்கின வாடிக்கையாளர். எங்களுக்கு உங்களைப் போன்ற வாடிக்கையாளர்கள் தான் வேண்டும்" என்று கூறி அனுப்பினார்.

கங்காதரனிடம் ஜமீன்தாரர் நகையில் மாறுதல் செய்யக் கொடுத்த பணம்தான் அவனுக்கு அப்போது உதவியது. அவன் நகையுடன் மாலை ஆவதற்குள் தன் ஊரை அடைந்து ஜமீன்தாரரிடம் நகையைக் கொடுத்தான்.

அந்த நகைக் கடைக்காரர் ஜமீன்தாரர் ஜெயவீரரை நன்கு அறிவார். அவர் முன்தினம் ஜமீன்தாரர் கூறிவிட்டுப் போனபடி கங்காதரன் நகையோடு வந்து முதலில் மாறுதல்கள் செய்யச் சொன்னபோது மறுத்துவிட்டார்.

கங்காதரன் எப்படி நகையில் மாற்றங்களை செய்து கொண்டு வந்தான் என்பதை விவரமாகக் கேட்டு அறிந்த ஜமீன்தாரர் "பேஷ் ஒரு வேலையை உன்னிடம் கொடுத்தால் குறித்த காலத்தில் சரியாகச் செய்து முடிக்கிறாய். இப்படிப்பட்டவனே எனக்குத் தேவை" என்று கூறி அவனைத் தாம் விரும்பிய வேலையில் அமர்த்தினார்.





# கலையின் மதிப்பு

விந்திய மலைச் சாரலில் விநோதன் என்ற மகா சிற்பி இருந்தான். அவனிடம் தீனன் என்பவனும் மாலி என்பவனும் சீடர்களாக இருந்து பத்து ஆண்டுகள் சிற்பக் கலையைக் கற்றனர்.

அவர்கள் தம் பயிற்சியை முடித்துக் கொண்டு அங்கிருந்து கிளம்புகையில் விநோதன் ''சீடர்களே! நீங்கள் கற்றுக் கொண்டதை எல்லாம் உங்கள் சீடர்களாகத் தகுதியுடையவர்களுக்குச் சொல்லிக் கொடுங்கள்'' என்று கூறி அனுப்பினார்.

தீனன் தன் ஊரை அடைந்தான். அவனுக்கு வயல்களும் வீடும் வசதியாக இருந்தன. அவன் உருவாக்கிய சிற்பங்களைக் கண்டு எல்லோரும் பாராட்டினர்கள்.

தீனன் யாரிடமும் பணத்தை எதிர்பாராமல் சிற்பங்களை செதுக்கித் தரலானான். அவனிடம் ஏராளமான சீடர்கள் சிற்பக் கலையைப் பயின்றனர். தீனனின் பெயர் எங்கும் பரவியது.

இப்படியாகச் சில ஆண்டுகள் கழிந்தன. ஒருநாள் அந்நாட்டு மன்னன் நாடெங்கும் இவ்வாறு பறை சாற்றுவித்தான். தேவலோக நடனமாதான மேனகையின் உருவத்தை அழகிய சிற்ப வடிவில் வடித்துக் கொடுப்பவர்களுக்குப் பத்தாயிரம் வராகன்கள் பரிசளிக்கப் படும். அந்த சிலையை மன்னர் தாம் புதிதாக நிர்மாணிக்கப் போகும் நாட்டிய மண்டபத்தில் நிறுவுவார். நாட்டிய மண்டபம் கட்டச் சிற்பிகளும் தேவை.

தீனன் தன் சீடர்களை நாட்டிய மண்டப வேலைக்கு அனுப்பி விட்டு தானும் மேனகையின் சிலையை உருவாக்கலவானான்.

—பாபநாசம் சாமா—

ஆனால் போன சீடர்கள் ஒருவாரத்தில் திரும்பி வந்துவிட்டார்கள். மண்டபம் கட்ட மன்னன் வைத்த தேர்வில் அவர்கள் வெற்றி பெறவில்லையாம்.

அப்போது தீனன் அவர்களிடம் "கவலைப் படாதீர்கள். இன்னும் பயிற்சி அளித்து உங்களை எல்லாம் எனக்குச் சமமாக ஆக்க விடுகிறேன்." என்று ஆறுதல் கூறினான். அதன்பின் அவன் மேனகையின் சிலையை மூன்று மாத காலத்தில் உருவாக்கினான்.

நாட்டிய மண்டபம் தயாராகி விட்டது என்று அறிந்ததும் தீனன் தன் சிலையை எடுத்து ஒரு மாட்டு வண்டியில் வைத்துக் கொண்டு தலைநகருக்குச் சென்றான். இரண்டு நாட்களுக்குப் பின் தீனன் தன் நண்பன் மாலி இருக்கும் சிற்றூரை அடைந்தான். மாலியைப் பற்றி அவன் விசாரித்த போது சட்டென யாராலும் எதுவும் கூறி முடியவில்லை. முடிவில் ஒரு வாலிபன் "ஓ அந்நக் கல் பொம்மைகள் செய்பவனா? அவனிடமா நீ பொம்மை வாங்கப் போகிறாய்? அவன் சொல்லும் விலையை உன்னால் கொடுக்க முடியாது பேராசை பிடித்தவன் அவன்" என்று கூறி அவன் வீட்டையும் காட்டினான்.

மாலியின் வீடு சிறியதாய் சாதாரண வீடுபோல இருந்தது.



ஆனால் அவன் ஏராளமாய்ப் பணம் சம்பாதித்து வந்தான். அவன் தான் உருவாக்கிய சிலைக்கு நிறைய பணம் வாங்கிக் கொண்டு தான் கொடுத்து வந்தான். அது போலச் சிற்பக் கலையைக் கற்பிக்கப் பெருந் தொகையைக் கட்டணமாகக் கேட்டான். அதனால் அவனுக்கு சீடர்கள் ஓரிருவரே. அவர்கள்கூட அப்போது நாட்டிய மண்டப நிர்மாணத்தில் ஈடுபட்டிருந்தனர்.

இதை எல்லாம் கேட்ட தீனன் ஆச்சரியப்பட்டு "நம் பயிற்சி முடிந்ததும் நம் குரு சொன்னதை மறந்து நீ இப்படிப் பணம் கேட்கிறாயே. இது சரியா?" என்று



செர்க்க போகத்தை அனுபவித்ததுபோல உணர்ந்தான். அதன் பிறகு இரு நண்பர்களும் தலைநகருக்குக் கிளம்பினர். மாலியும் தீனனைப் போலவே தான் உருவாக்கிய சிலையைப் பல துணிகளால் சுற்றிப் பத்திரமாக எடுத்துச் சென்றான். இருவரும் ஒருவர் தயாரித்த சிலையை மற்றவர் பார்க்கவில்லை.

தலைநகரை அடைந்ததும் இருவரும் தாம் உருவாக்கிய சிலை மூட்டைகளை மன்னனிடம் கொடுத்தனர். மன்னனும் அந்த மூட்டைகளை வாங்கிக் கொண்டு மறுநாள் அவர்களை வரச் சொன்னான். அவர்களும் மன்னனை வணங்கிவிட்டு அவர்களுக்கு ஏற்பாடு செய்யப்பட்ட விடுதியில் போய்த் தங்கினார்கள்.

மறுநாள் அவர்கள் மன்னனைப் பார்த்தபோது அவன் "உங்கள் சிலைகள் மிக நேர்த்தியாக உள்ளன. ஆனால் இரண்டும் ஒரே அச்சில் வார்த்ததுபோல உள்ளன. இந்த இரண்டு சிலைகளையும் நாட்டிய மண்டபத்தில் வைக்கத் தீர்மானித்துவிட்டேன். இரண்டு மூட்டைகளையும் பிரித்து சிலைகளை எடுத்தேன். அதனால் எந்தச் சிலை யார் தயாரித்தது என்று தெரியவில்லை. நீங்களே பார்த்துச் சொல்லுங்கள்" என்றான்.

கேட்டான். மாலியோ "நன்றாக நினைவிருக்கிறது. நான் பேராசை பிடித்தவன் அல்ல. அப்படி இருந்தால் லட்சலட்சமாகச் சம்பாதித்து ஆடம்பரமாக வாழ்ந்து கொண்டல்லவா இருந்திருப்பேன்! நான் வாழும் வீட்டையும் முறையையும் பார்த்தாயா? இங்கு அவரவர் வேலைகளைத் தாமே செய்து கொள்கிறார்கள். வேலையாட்கள் கிடையாது" என்றான்.

அதைக் கேட்ட தீனன் தன் மனதில் மாலியை மகாக் கஞ்சன் என்று எண்ணினான். ஆனால் மாலி தன் நண்பனை நன்கு உபசரித்தான். அங்கு தீனன் தங்கிய நான்கு நாட்களிலும் தான்

அவர்களிருவரும் அந்த இரு சிலைகள் வைக்கப்பட்டிருந்த இடத்திற்கு போனதும் மலைத்துப் போய் நின்றார்கள். ஏனெனில் அவை ஒரே அச்சில் வார்த்தது போல் இருக்கவே அவர்களால் கூடத் தாம் எதை உருவாக்கினோம் எனக் கண்டுபிடிக்க முடியவில்லை.

மன்னன் இரு சிற்பிகளையும் சமமாக கௌரவிக்கப் போவதாகக் கூறியபோது அவர்களின் குரு விநோதன் அங்கு வந்தான். அவன் மன்னனிடம் "இவர்களில் முதலிடம் பெறத் தகுந்தவன் மாலியே. தீனனுக்கு இரண்டாவது இடமே" என்றான்.

மன்னனும் "அது ஏன்? என்று கேட்கவே விநோதனும் "இவர்கள் என் சீடர்கள். தீனன் யார் யாருக்கோ சிற்பக் கலையைக் கற்றுக் கொடுத்தான். அவர்கள் அதனைக் கற்கத் தகுந்தவர்களா என யோசிக்கவில்லை. இது சிற்பக் கலையை அவமதிப்பதாகும். அவனது சீடர்களில் ஒருவன்கூடத் தங்களது தேர்வில் தேறவில்லை. கலையின் அருமையை உணர்பவன் உண்மை கலைஞன். அவன் புகழைவிடக் கலையை மதிப்பவன். அதனால் கலையின் மதிப்பை உயர்த்தத் சீடர்களைத் தேர்ந்தெடுத்து போதித்த மாலியே சிறந்தவன். அவனது சீடர்கள் உங்கள் தேர்வில் வெற்றி பெற்றவர்கள். அவன் அக்கலையைப் பயில்விக்க அதிகக் கட்டணம் கோரியது சீடர்களை வடிகட்டி எடுக்கவே. எனவே மாலிக்கே முதலிடம் கொடுக்க வேண்டும்" என்றான்.

விநோதன் கூறிய விளக்கத்தை மன்னனும் தீனனும் மாலியும் ஏற்றனர். மன்னன் மாலிக்கு ஏராளமான பரிசுகளைக் கொடுத்தான். தீனனுக்கும் பரிசு கிடைத்தது. அவன் அப்போதே தன் முறையை மாற்றிக் கொண்டான்.



# அம்புலிமாமா செய்திகள்

## தனி விமானப் பயணம்

நாம் எங்காவது அவசரமாகச் செல்ல ஆகாய விமானத்தைப் பயன்படுத்துகிறோம். இதற்காக விமான சர்வீஸ்கள் விமானங்களை இயக்குகின்றன. சிலர் இந்த விமானங்களில் மற்ற பயணிகளுடன் சேர்ந்து செல்ல முடியாது போய்த் தனி விமானங்களை அமர்த்திக் கொண்டு செல்வதும் உண்டு. அண்மையில் சௌதி இளவரசர் பாரிஸில் நியூயார்க்கிற்குச் செல்லும் விமானத்தை உரிய நேரத்தில் பிடிக்க முடியாமால் போனதால் மேலும் காத்திருக்க விரும்பாமல் 2,36,000 டாலர்கள் வாடகைக்கு ஒரு தனி விமானத்தை அமர்த்திக் கொண்டு நியூயார்க் போய்ச் சேர்ந்தாராம்.

ஒரு பிரிட்டிஷ் இராணுவப் பணியாளர் தம் மூக்குக் கண்ணாடிக்காகத் தனி விமானம் ஒன்றை அமர்த்த வேண்டியதாயிற்றாம். அவர் அப்போது இங்கிலாந்திலிருந்து 30,000 கி.மீ. தொலைவிலுள்ள பாக்லாந்தில் கம்ப்யூட்டரை இயக்குபவராகப் பணிபுரிந்து கொண்டிருந்தார். ஒரு நாள் கால்பந்து விளையாடும்போது அவரது மூக்குக் கண்ணாடி கீழே விழுந்து உடைந்து போயிற்று கண்ணாடி அணியாமல் அவரால் வேலை செய்ய முடியாது. பாக்லாந்திலோ கண்ணைப் பரிசோதித்து மூக்குக் கண்ணாடி அணிய வசதி இல்லை. அதனால் அவர் பாக்லாந்திலிருந்து இங்கிலாந்திற்குத் தனி விமானத்தில் போய் மூக்குக் கண்ணாடியைத் தேர்ந்து எடுத்து அணிந்து கொண்டு வந்தாராம்.







## மோர்ஸ் முறை மறைகிறது

முன்பெல்லாம் செய்திகளை அனுப்ப புள்ளிகளையும் கோடுகளையும் கொண்ட மோர்ஸ் குறி முறை பயன்பட்டது. தற்போதோ டெலிபோன் கம்ப்யூடர், செயற்கைக் கோள் ஆகியவற்றைக் கொண்டு நொடியில் செய்திகளை அனுப்புகிறார்கள். கப்பல்கள் முன்பு ஆபத்தில் அகப்பட்டால் எஸ்.ஒ. எஸ். என்ற மூன்று எழுத்துக்களை மோர்ஸ் குறி முறையில் அனுப்பி வந்தன. எஸ்.ஒ.எஸ். என்றால் 'சேவ் அவர் சோல்ஸ்' என்ற ஆங்கில சொற்றொடரின் சுருக்கம். இப்போதெல்லாம் கப்பல்கள் இந்தக் குறியைப் பயன்படுத்துவது இல்லை. மோர்ஸ் குறி முறையும் கொஞ்சம் கொஞ்சமாக மறைந்து கொண்டே வருகிறது.




அயோத்தியில் இராமர் ஒருநாள் அவையில் கொலுவீற்றிருக்கையில் விசுவாமித்திர முனிவர் வேகமாக அங்கு வந்தார். அவர் "இராமா! காசி மன்னன் யயாதி கர்வம் பிடித்தவன். என்னை அவமதித்துவிட்டான். நீ போய் அவனை ஒழி. இது உன் குருவான என் கட்டளை" என்று கூறிவிட்டு போய் விட்டார். அது கேட்டு இராமர் திகைத்துப் போனார்.

யயாதி நீதி தவறாமல் ஆண்டு அயோத்திக்கு அடங்கிய சிற்றரசன் விசுவாமித்திரரோ இராமருக்குச் சிறு வயதில் பலா, அதிபலா என்ற மந்திரங்களை உபதேசித்த குரு. நேர்மையாயும் மக்கள் அன்பையும் பெற்ற யயாதியை எப்படி ஒழிப்பது? குருவின் கட்டளையை எப்படி நிறைவேற்றுவது? இது பெருத்த பிரச்னையாயிற்றே!

யயாதியிடம் சில கிராம மக்கள் யானைகள் கூட்டம் கூட்டமாய் வந்து தம் வயல்களை நாசப்படுத்துவதாயும் மேலும் கொடிய மிருகங்கள் ஆடுமாடுகளைக் கொன்றும் மக்களை பயமுறுத்தியும் வருவதாயும் அவற்றிலிருந்து தம்மைக் காக்க வேண்டும் என்றும்

—இராமருடன் அனுமார் போர்—



இராமர் மற்போருக்கு வரும் செய்தி கிடைத்ததும் யயாதி மிகவும் பயந்து போனான். யயாதியின் மனைவி யசோதரை. அவர்களது மகன் சந்திராங்கதன். சந்திர முகி என்ற மகளும் அவர்களுக்கு இருந்தாள். அந்தக் குடும்பம் முழுவதுமே இராமரிடம் ஆழ்ந்த பக்தி கொண்டிருந்தது. இராமரே சண்டைபோட வருகிறார் என்பதைக் கேட்டதும் அவர்கள் யாவரும் திகைத்துப் போனர்கள்.

சற்று யோசித்து யயாதி! "இராமர் தஞ்சம் என்று தம்மிடம் வந்தவர்களை ஒருநாளும் கைவிட்டதில்லை. அதனால் நான் அவரது கால்களில் விழுந்து என்னை காக்குமாறு வேண்டிக் கொள்கிறேன்" எனத் தீர்மானித்தான்.

அவன் தன் பரிவாரங்களுடன் அயோத்திக்குச் செல்ல ஏற்பாடுகளைச் செய்து கொண்டிருக்கையில் நாரத முனிவர் அங்கு வந்தார். யயாதி அவரிடம் எல்லாவற்றையும் விவரமாகக் கூறித் தான் இராமரிடம் சரணம் அடையப் போவதையும் கூறினான். அதைக் கேட்ட நாரதர் சிரித்து "அட பைத்தியமே! உன் மூளை இப்போது மழுங்கிப் போய்விட்டதா என்ன? ஒரு சொல் ஒரு அம்பு என்று பெயர் பெற்றவன் இராமன். உன்னைப் பார்த்ததுமே அம்பை எய்து உன்னை கொன்று

முறையிட்டார்கள். மக்களின் நலனையே கருதும் யயாதி அவர்களின் துயரைப் போக்கக் காட்டு மிருகங்களை வேட்டையாடக் கிளம்பினான். அப்போது விசுவாமித்திரர் அவ்வழியே வந்தார். வேட்டையில் முழு கவனத்தைச் செலுத்திக் கொண்டிருந்த யயாதி விசுவாமிதித்திரர் வந்ததை கவனிக்கவில்லை. விசுவாமித்திரர் இதனைத்தான் யயாதி தன்னை கவனிக்காமல் அவமதித்துவிட்டதாகக் கருதி அவனையே ஒழிப்பதாகத் தீர்மானித்துக் கொண்டு அயோத்திக்கு வந்து இராமருக்குக் கட்டளை இட்டுவிட்டுச் சென்றார். இதுதான் நடந்த விஷயம்.

விடுவான். இனி யோசித்து யோசித்து நேரத்தை வீணாக்காதே. நீ அஞ்சனாதேவியிடம் அபயம் கோரு. அனுமார் அவளது மகன். இப்போது அவர் அஞ்சனாதேவியுடன்தான் இருக்கிறார். அவர்கள் உன்னைக் காப்பாற்றுவார்கள்'' என்றார்.

யயாதிக்கு நாரதர் கூறியது சரி என்று பட்டது. எனவே அவன் அஞ்சனாதேவியின் ஆசிரமத்திற்கு விரைந்து சென்றான். அங்கு அஞ்சனாதேவி தியானத்தில் மூழ்கி இருந்தாள். யயாதி கதறியவாறே ''நான் உன்னிடம் சரண் புகுந்துவிட்டேன் என்னைக் காப்பாற்று'' என்று கூறினார்.

திடீரெனக் கூக்குரல் கேட்டதும் அஞ்சனா தியானம் கலைந்து எழுந்தாள். தன் எதிரே நடு நடுங்கி நிற்கும் யயாதியைக் கண்டு அவர் "மகனே! கவலைப்படாதே. பயப்பட வேண்டாம். என் மகன் அனுமனின் மீது ஆணை வைத்துக் கூறுகிறேன். உன் உயிருக்கு எவ்வித ஆபத்தும் வராது'' என வாக்கு றுதி அளித்தாள்.

அப்போது அனுமார் கந்தமாதன பர்வதத்திலிருந்து திரும்பி வந்தார். யயாதி அவரையும் அஞ்சனா தேவியையும் விழுந்து வணங்கி ''என்பெயர் யயாதி. காசியின் மன்னன். இராமரின் பரம பக்தன். என்னை இப்போது வரப்போகும் ஆபத்திலிருந்து காக்க உங்களைத் தவிர வேறு யாராலும்





முடியாது'' என்று உருக்கமாக வேண்டினான்.

அனுமாரும் ''கவலைப் படாதீர்கள். சற்று முன்தானே என் அன்னை உங்களுக்கு அபயம் அளித்தாள். நான் என் தாயாரின் வாக்குறுதியைக் கண்டிப்பாகக் காப்பாற்றுவேன். இதுபற்றிக் கொஞ்சமும் சந்தேகப் படவேண்டாம்'' என்று ஆறுதலாகக் கூறினார்.

அப்போது அஞ்சனாதேவி "என் மகன்தான் அபயம் அளிப்பதாகக் கூறி இனி பயப்படாமல் உனக்கு யாரால் என்ன ஆபத்து வரப்போகிறது என்பதை விவரமாகச் சொல்" என்றாள். யயாதியும்" என்ன என்று சொல்வேன்? இராமர் என்னைக் கொல்லப் போகிறாராம். இதற்கு என்ன காரணம் என்பது கூடத் தெரியாது'' என்று கூறினான்.

அது கேட்டு அஞ்சனாதேவி "ஆ! இராமராலா உனக்கு ஆபத்து வரப்போகிறது! என்ன காரியம் செய்துவிட்டேன். முன்பின் யோசியாமல் உனக்கு அபயம் அளிப்பதாக வாக்களித்துவிட்டேனே! இனி என்ன செய்யப் போகிறேனோ?'' என்று கூறிப் பெருமூச்சு விட்டாள்.

அப்போது அனுமார் அம்மா வாக்குக் கொடுத்த பிறகு அதை நிறைவேற்றத் தயங்கி என்ன செய்வது என்றெல்லாம் யோசித்துக் கொண்டிருக்கக்கூடாது. தஞ்சம் அடைந்தவர்களைக் காப்பது தான் நம் கடமை. இந்த யயாதிக்கு நான் உயிருடன் உள்ளவரை எவ்வித ஆபத்தும் நேராது'' என்று கூறினார்.

அனுமார் யயாதியைக் காக்கப் போகிறார் என்ற செய்தி எங்கும் பரவியது. அது அயோத்திக்கும் எட்டிவிட்டது. இராமரும் கேட்டார். சீதைக்கும் தெரிந்துவிட்டது. அவள் அரண்மனை உப்பரிகை மீதிருந்து பார்த்துக் கொண்டு இருந்தாள். அப்போது யயாதியின் மனைவி தன் இரு குழந்தைகளை அழைத்துக் கொண்டு அந்த அரண்மனைக்கு வந்து கொண்டிருந்தாள்.

அவள் சீதையைக் கண்டு "தாயே! எனக்கு மாங்கல்ய பிக்ஷை

அளியுங்கள். என் கணவரைக் காப்பாற்றுங்கள்'' என்று வேண்டினாள். சீதையும் ''யசோதரா! உன் கணவன் பத்திரமாக அனுமாரோடு இருப்பதாகத் தெரிகிறது. அதனால் உன் கணவனுக்கு எவ்வித ஆபத்தும் நேராது. நீ உன் கணவன் திரும்பி வரும் வரை இங்கேயே உன் குழந்தைகளோடு இருந்துவிடு'' என்று கூறி அந்தப்புரத்திலேயே அவர்கள் தங்கி இருக்க எல்லா வசதிகளையும் செய்து கொடுத்தாள்.



இராமர் யயாதியைக் கொல்ல வில்லையும் அம்பையும் எடுத்துக் கொண்டு அவன் இருக்கும் இடத்திற்கு நடந்து சென்றார். அவர் பின்னால் அவரது மூன்று சகோதரர்களும், மந்திரிகளும் மற்றும் சுற்றுப் பரிவார வீரர்களும் சென்றனர்.

இராமரைக் கண்ட அனுமார் அவரது கால்களில் விழுந்து ''ஐயனே! தாங்கள் யயாதியின் மீது இரக்கம் கொண்டு விட்டு விடுங்கள். அவன் ஒரு குற்றமும் செய்யவில்லை'' என்று வேண்டினார். ராமரோ ''அதெல்லாம் முடியாது'' எனக் கூறித் தன் காலால் அவரைத் தள்ளினார்.

அனுமாரோ ''ஆஹா! தங்கள் பாதம் பட்டு புனிதனானேன். அகல்யை பெற்ற பாக்கியம் எனக்கும் கிடைத்தது. எனக்குப் புதிய சக்தியே கிடைத்துவிட்டது.'' என்று கூறிப் பரவசப்பட்டார். இராமரோ ''என்னைப் புகழ்ந்தது போதும். மரியாதையாக யயாதியை என்னிடம் ஒப்படைத்து விடு என் குருவின் கட்டளைப் படி நான் நடந்தாக வேண்டும்'' என்றார்.

அனுமாரும் தங்களது குருவின் கட்டளை நியாயமானது அல்ல. நான் என் தாயின் வாக்கைக் காக்க யயாதியைக் காப்பாற்றியே ஆக வேண்டும். ஆகையால் அவனைக் கொல்ல வேண்டும் என்றால் முதலில் என்னைக் கொன்றாக வேண்டும்'' என்றார்.

இவ்வாறு கூறி அனுமார் நின்று மிகவும் உயரமாகிக் கொண்டே



போனார். அதைக் கண்ட இராமர்'' ஓ! உன் சக்தியைக் காட்டி மிரட்டுகிறாயா?'' என்று கோபத்தோடு கேட்டார். அனுமாரோ ''இல்லை. இது என் சக்தி இல்லை, உங்களது பாததுளியின் மகிமை'' என்று பணிவுடன் கூறினார்.

இராமரோ வில்லை எடுத்து அம்பைத் தொடுத்தார். அனுமார் தன் வாலை நீளமாக்கி அதனை கிர்கிர்ரென்று சூழற்றினார். இராமர் எய்த அஸ்திரங்களை எல்லாம் அவர் தன் வாலைச் சூழற்றித் தடுத்தார். அப்போது விசுவாமித்திரர் வேகமாக அங்கு வந்தார். அப்போது அனுமார் தன் உடலை மேலும் பெரிதாகவும் உயரமாகவும் ஆக்கிக் கொண்டு ''ஐயனே! அதோ உங்கள் குருவே வந்துவிட்டார்'' என்றார்.

இராமரோ ''யார் வந்தாலும் சரி. கடைசியாகச் சொல்கிறேன். நான் என் ராமபாணத்தை எய்யப் போகிறேன். ஜாக்கிரதை ''எனக் கூறிப் பிறைச் சந்திரன் வடிவிலுள்ள இராம பாணத்தை எடுத்தார். அப்போது விசுவாமித்திரர் ''இராமா! அனுமாரை எதிர்த்தது போதும். என் கர்வத்தால் இந்த அனர்த்தம் விளைந்துவிட்டது. யயாதி ஒரு குற்றமும் புரியவில்லை. இந்த சண்டையை நிறுத்து'' என்றார்.

இராமரோ ''முடியாது குருதேவரே! என் அஸ்திரத்தை எடுத்துவிட்டேன். உங்கள் கட்டளையை நான் நிறைவேற்றியாக வேண்டும்! என்னைத் தடுக்க வேண்டாம்.'' என்றார். அவர் யயாதியைக் காத்து நின்ற அனுமாரின் மார்பிற்குக் குறி வைத்து அனுமாரே! என் பாணம் உன் மார்பைத் துளைக்க போகிறது. அதற்கு முன் யயாதியை ஒப்படைத்துவிடும்'' என்று கூறினார்.

அனுமாரும் ''நான் இராம நாமத்தை ஜெபிப்பவன். எப்போதும் அதனையே உச்சரித்துக் கொண்டிருப்பவன். அதனால் எனக்கு எவ்வித பயமும் இல்லை. தஞ்சம் என்று அடைந்தவரைக்

காப்பது என் கடமை. எனவே நான் யயாதியைக் காக்கத்தான் போகிறேன். என் மார்பின் மீது தாராளமாக பாணத்தை எய்யலாம். என் மார்பைப் பிளந்து காட்டு கிறேன்'' எனக் கூறித் தம் மார்பை கிழித்துக் காட்டினார். இராமர் தன் பாணத்தை எய்தார். ஆனால் அனுமார் அதைத் தன் மார்பில் புக விட்டார். அதில் புகுந்த அந்த அம்பு மாயமாய் மறைந்து போயிற்று.

ஆனால் அனுமாரின் மார்பி னுள் இராமரின் திரு உருவம் ஒளி விட்டுப் பிரகாசிப்பதை யாவரும் கண்டார்கள். அவர்கள் ஆச்சரியப் பட்டு மலைத்துப் போனார்கள். இராமர் தம் வில்லை தாழ்த்தி ''அனுமாரே! நீர் வென்றுவிட் டீர். நான் தோற்றுப் போனேன்'' என்றார். அப்போது அனுமார் தன் பிளந்த மார்பை முன்போல இருக்க மூடிக் கொண்டார்.

அனுமார் இராமரிடம் ''ஐயனே! இதில் யாருக்கும் வெற்றி இல்லை. தோல்வியும் இல்லை. உங்கள் பாணத்தை என் மார்பில் வாழும் நீங்களே எடுத்துக் கொண் டீர்கள். இது உங்கள் மகிமைதான். என் மகிமை எதுவும் இல்லை'' என்று கூறி வணங்கினார்.

அப்போது விசுவாமித்திரர் அனுமாரைத் தம்மிடம் வரச் சொல்லி ''அனுமாரே! தஞ்சம் கேட்பவர்களைக் காப்பதில் நீ இராமருக்குச சமமே. உன் துணிச் சலைக் காட்டி சுத்த வீரன் நீ என்று நிரூபித்துவிட்டாய். இராமனையே எதிர்ப்பது என்பது சாமான்னிய விஷயமா? நீ வீர அனுமான் என்று பெயர் பெற்றதை நிரூபித்துக் காட்டி விட்டாய். உன் புகழ் மூவுலகிலும் நிலைத்து நிற்கும்'' என்று கூறிப் பாராட்டினார்.

அனுமார் இராமரிடமும் அவ ரோடு வந்தவர்களிடமும் விடை பெற்றுக் கொண்டு கந்தமாதன பர்வதத்திற்குப் போய் அமர்ந்து தவத்தில் மூழ்கிவிட்டார்.






பாலய்யா என்ற விவசாயியின் தங்கை மல்லம்மா. அண்ணன் தன் தங்கையை உயிருக்கு உயிராக நேசித்தான். மல்லம்மாவோ மிகுந்த கர்வம் பிடித்தவள். அவள் தன் அண்ணனைக் கூட மதிப்பதில்லை. ஆனால் அதை அவன் பொருட்படுத்தாமல் தன் தங்கை சுகமாக வாழட்டும் என நினைத்து தன் இரண்டு ஏக்கர் நிலத்தை வரதட்சணையாகக் கொடுத்து நல்ல இடத்தில் கல்யாணம் செய்து வைத்தான். அதற்குப் பிறகே அவன் ஒரு ஏழைப் பெண்ணை மணந்து கொண்டான்.

மல்லம்மா தன் தணவன் வீட்டிற்குச் சென்றாள். பாலய்யாவின் மனைவி குடித்தனம் செய்ய வந்தாள். அவர்களுக்கு ஆறு வருடங்களுக்குள் நான்கு குழந்தைகள் பிறந்துவிட்டன. அந்தக் குடும்பத்தை நிர்வகிக்க பாலய்யா திணறினான். அவனது வருமானம் அரை வயிற்றுக் கஞ்சிக்குக் கூடப் போதவில்லை.

ஒறுநாள் பாலய்யா தன் தங்கையைக் காணக் கிளம்பினான். பகல் முழுவதும் நடந்து மாலையாகும்போது களைத்துப்போய் மல்லம்மா இருந்த ஊரை அடைந்தான். அழுக்கான கிழிந்த வேட்டி கட்டிக் கொண்டு பரட்டைத் தலையுடன் வந்து கொண்டிருந்த பாலய்யாவை மல்லம்மா தன் வீட்டிலிருந்து பார்த்துவிட்டாள்.

அந்தக் கோலத்தில் வந்து கொண்டிருந்த தன் அண்ணனைக் கண்டு இரக்கபடுவதற்கு பதிலாக பொறுமிக் கொண்டு ''கொஞ்சம் வசதியுடன் இருந்துவிட்டால் இவர்களெல்லாம் பொறுப்பதில்லையே'' என முணு முணுத்தாள். தங்கை

—சிந்து சங்கர்—

வீட்டு வாசலில் நின்று கொண்டிருந்ததை பாலய்யா பார்த்துவிட்டான். ஒரு முறை கண்மூடிக் கண் திறப்பதற்குள் அவள் அங்கு இல்லாதது கண்டு அவன் தன் வரவைக் கணவனுக்குத் தெரிவித்து விட்டு வந்து வரவேற்பாள் என்று எண்ணினான்.

வீட்டிற்குள்போன மல்லம்மா தன் அண்ணனை விரைவில் எப்படி விரட்டுவது என்று யோசிக்கலானாள். சட்டெனத் தான் கட்டியிருந்த பட்டு புடவையை அவிழ்த்து உள்ளே வைத்துவிட்டு ஒரு கிழிந்த நூல்ப் புடவையை எடுத்துக் கட்டிக் கொண்டாள். ஒரு மண் கலயத்தில் தண்ணீர் எடுத்துக் கொண்டு அவள் வாசலுக்கு வந்தாள்.

ஒரே நிமிடத்தில் தன் தங்கையிடம் ஏற்பட்ட மாறுதலைக் கண்டு பாலய்யா திகைத்தான்.

வாசலில் நின்ற தன் அண்ணனைப் பார்த்த மல்லம்மா கண்ணீர் வடித்தவாறே'' அப்பாடா! இப்போதாவது உனக்கு என் நினைவு வந்ததா அண்ணா! நான் இங்கே சாப்பாட்டுக்குக்கூட கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறேன்'' என்று கூறி மண் கலயத்தை நீட்டினாள்.

தன் தங்கையின் அலங்கோலத்தை கண்டு பாலய்யா வருந்தி அப்படியே வாசல் திண்ணையில் உட்கார்ந்துவிட்டான். அண்ணன் வீட்டிற்குள் வந்துவிடப் போகிறானே எனப் பயந்து ஒரு கயிற்றுக்



கட்டிலை அவள் சட்டெனக் கொண்டு வந்து போட்டாள். அதில் பாலய்யா படுத்து இளைப்பாறி னான்.

இதற்குள் கொல்லைப் புற வழியே போய் மல்லம்மா வயலி லிருந்து வந்து கொண்டிருந்த தன் கணவனைச் சந்தித்துத் தன் அண் ணன் வந்திருப்பதைத் தெரிவித்து அவன் இப்போது வந்திருப்பது நம் மிடமிருந்து பணம் பறித்துப் போகத் தான். அவனுக்கு நம் நிலைமை படுமோசம் எனத் தோற்றுவிக் கவே இப்படி வேஷம் போட்டிருக் கிறேன்'' என்றாள்.

அவள் கணவனோ ''நம் வீட் டிற்கு வராத விருந்தாளி வந் திருக்கிறார். அவரை நன்கு உப சரிக்க வேண்டாமா?'' எனவே மல்லம்மா ''என் அண்ணன் மீது எனக்கு இல்லாத அக்கறை உங்க ளுக்கு எதற்கு? நீங்கள் பேசாமல். இருங்கள். எல்லம் நான் பார்த் துக் கொள்கிறேன்'' என்றாள்.

அவள் இன்னொரு பழைய கட்டிலைக் கொண்டு வந்து பாலய்யாவின் கட்டிலின் பக் கம் போட்டாள். மறுபேச்சு பேசமுடியாமல் அவள் கணவன் அந்தக் கட்டிலில் படுத்துக் கொண் டான். தன் மைத்துனனைப் பார்க்க விரும்பாமல் தன் முகத்தை அவன் வேறு பக்கமாகத் திருப்பிக் கொண்டான்.

அன்று ஏதோ ஒரு விசேஷம் என்று மல்லம்மா பகலில் விருந்து





சாப்பாடு சமைத்திருந்தாள். இர வில் தன் கணவனுக்கு அதைப் பரிமாறலாம் என்ற அவளது ஆசையில் மண் விழுந்தது. அவள் கணவனுக்கோ ஒரே பசி. பாதி ராத்திரிக்கு மேல் அவனை எழுப்பி சாப்பிட அழைத்துப் போவதாக மல்லம்மா சொல்லிப் போனாள்.

பாலய்யாவுக்கோ தூக்கம் வர வில்லை. தங்கையின் ஏழைமை அவன் மனதைப் பெரிதும் வாட் டியது. மல்லம்மாவின் கணவ னோ பாலய்யாவின் இந்த நிலை கண்டு மிகவும் இரங்கினான். ஆனாலும் அவன் தன் மனைவி யின் வேஷத்தை வெளிப்படுத்த விரும்பவில்லை. குளிர் அதிக மாக இருந்ததால் மல்லம்மா ஒரு கும்முட்டி அடுப்பில் தணல் போட்டுத் தன் கணவனின் கட்டி லின் கீழ் வைத்திருந்தாள். அதை மெதுவாக அவன் பாலய்யாவின் கட்டிலின் கீழ் வைத்து மனம் தேறினான்.

நள்ளிரவில் மல்லம்மா வாச லுக்கு வந்தாள். அவள் கணவன் நன்கு தூங்கிக் கொண்டிருந்தான். இருட்டில் தூங்காமல் போர்வை யைப் போர்த்திப்படுத்திருந்த பாலய்யாவை அவள் தன் கண வன் என எண்ணிவிட்டாள். மே லும் கும்மட்டி வேறு பாலய் யாவின் கட்டிலின் கீழ் இருந்தது அவள் எண்ணியதை உறுதிப்படுத் தியது.

அவள் தாழ்வான குரலில் "எழுந்து சாப்பிட வா" என்று கூறிவிட்டு உள்ளே போனாள். பாலய்யா போர்த்திய போர்வை யோடு இருட்டில் அவள் பின்னா லேயே சென்றான். தன் தங்கை தன் கணவனுக்குப் பயந்து ரகசிய மாகத் தன்னை அழைத்துப் போய் சாப்பாடு போடுகிறாள் என பாலய்யா நினைத்துக் கொண் டான்.

இருட்டில் சமையலறையில் மல்லம்மா அவனை உட்காரச் சொல்லி "உஷ் சத்தம் செய்யா மல் சாப்பிடு. இன்னமும் வேண்டு மானால் மூலையிலுள்ள பானை

யில் உள்ளதை எடுத்துக்கொள். பிறகு வந்த வழியே போய்விடு'' என்று கூறிவிட்டுத் தன் அறைக்குச் சென்றுவிட்டாள்.

தன் மீது இவ்வளவு பரிவு காட்டுகிறாளே தன் தங்கை என பாலய்யா நினைத்துத் திருப்தியாகச் சாப்பிட்டான். கை அலம்பிக் கொண்டு மூலையில் வைக்கப்பட்டிருந்த பானையில் கைவிட்டுப் பார்க்க அதிலிருந்து பணப்பையும் கொஞ்சம் வெள்ளி நாணயங்களும் கிடைத்தன. அவற்றை எல்லாம் எடுத்துத் தன் துண்டில் கட்டி எடுத்துக் கொண்டு தன் தங்கை கூறியபடியே அவன் வந்த வழியே தன் ஊருக்கு அப்போதே திரும்பிப் போய்விட்டான்.!

இதற்கு இரண்டு மணி நேரம் கழிந்த பிறகே மல்லம்மாவின் கணவன் தூக்கம் கலைந்து எழுந்தான். அவன் உள்ளே போய் மல்லம்மாவை எழுப்பி ''எங்கே சாப்பாடு?'' என்று கேட்டான். அவள் கோபத்தோடு இன்னொரு தடவையா? சற்று முன்தானே நீ சாப்பிட்டாய்'' என்று எரிந்து விழுந்தாள்.

அதுகேட்டு அவன் கோபத்தோடு அடித்து ''நானா சாப்பிட்டேன்? பொய்யா சொல்கிறாய்?'' என்று உதைத்தான். அப்போது தான் பாலய்யா இல்லாததை கவனித்து என்ன நடந்தது என்பதை அவர்கள் ஊகித்துவிட்டார்கள். மல்லம்மாவோ தன் கணவன் கும்மட்டியை நகர்த்தியதால்தான் இப்படி நடந்தது எனச் சாடினாள்.

அவள் கணவனோ ''அப்படித்தான் செய்வேன். சொந்த அண்ணனுக்குச் சாப்பாடு போடாமல் விரட்ட நினைத்த நீ நாளைக்கு என் உறவினர்கள் வந்தால் இப்படிச் செய்யமாட்டாய் என்பது என்ன நிச்சயம்? முதலில் நீ வீட்டைவிட்டு வெளியே போ'' என்று அவள் கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளி கதவை தாளிட்டுவிட்டான்.



# செய்திகளில் சிறுவர்கள்

ஜப்பானில் ப்யூகோ நகரில் கடந்த ஜுலை 24, முதல் ஆகஸ்ட் 4ந்தேதி வரை ஆசிய பசிபிக் சிறுவர் மகா சபைகள் நடந்தேறின. இவற்றில் நாற்பது நாடுகளிலிருந்து முன்னூறு சிறுவர், சிறுமியர் கலந்து கொண்டார்கள். இந்தக் கூட்டங்களை 'ஜுனியர் சேம்பர் இன்டர்நேஷனல்' கூட்டியது. நம் நாட்டிலிருந்து எட்டு சிறுவர்கள் கொண்ட குழு இவற்றில் கலந்து கொண்டது. இக்குழுவிற்குத் தலைவனாக சென்னையைச் சேர்ந்த பனிரெண்டு வயதான சிறுவன் கணேச ரத்தினம் இருந்தான். இச்சிறுவன் சென்னை முகப்பேர் டி. ஏ. வி. பள்ளியின் எட்டாவது வகுப்பு மாணவன். இக் கூட்டங்களில் கலந்து கொண்டுவிட்டு கணேச ரத்தினம் நம் நாடு திரும்பியதும் 'அம்புலிமாமா' அலுவலசத்திற்கு வந்து புகைப்படத் தொகுப்பைக் காட்டி தனது ஜப்பான் பயண அனுபவங்களைக் கூறினான்.

கணேச ரத்தினமும் மற்ற ஏழு இந்தியச் சிறுவர்களும் ஜப்பானில் ஒரு குடும்பத்தரோடு தங்கினார்கள். ஒரு சில ஜப்பானிய வார்த்தைகளை இவர்கள் அறிவார்கள். அக் குடும்பத்தவர் ஒரு சில ஆங்கில வார்த்தைகள் அறிவார்கள். ஆனால் சைகைகள் காட்டி இவர்கள் தாம் சொல்ல வேண்டியதைத் தெரிவித்தார்களாம். கூட்டத்தில் கலந்து கொண்ட பல நாட்டுச் சிறுவர்கள் தம் நாட்டுப் புறக் கலை நிகழ்ச்சிகளை நடத்திக் காட்டினார்கள். ஒரு நாள் அவர்கள் தம் நாட்டில் அணியும் விதமாய் ஆடைகளை உடுத்தி வந்தார்கள். கணேச ரத்தினம் மிக எளிய ஆடைகளை அணிந்திருந்தான். (புகைப்படம் பார்க்கவும்) இவர்கள் இகேபேனா, ஜுடோ ஓரிக்மி போன்ற விளையாட்டுகளின் அடிப்படை முறைகளைத் தெரிந்து கொண்டார்கள். ஜப்பானில் கிரீன்லாந்து, அம்மியூ ஸிமெண்ட் பார்க், மெரீன்லாண்ட், ஸ்பேசிங் வோல்ட், மியூசியம் டால்பின் ஷோ என்று பல கேளிக்கை இடங்களைக் கண்டு





களித்தார்கள். புல்லெட் ரயிலில் கூடப் பயணம் செய்தார்கள்.

இக் கூட்டத் தொடரின் முடிவு நாளன்று ஒரு தீர்மானம் வாசிக்கப்பட்டது. பல நாட்டு தூதுவர்களாக வந்துள்ள சிறுவர்களான நாங்கள் இந்த அழகிய பூ உலகை எங்கள் வருங்கால வம்சத்தினருக்காக காப்பதாக வாக்குறுதி அளிக்கிறோம். நாங்கள் நாட்டுக் கலாச்சாரப் பண்பாட்டுகளை எமக்குள் பரிமாறிக் கொள்ள இங்கு கூடினோம். எம் நாட்டு எல்லைகளைக் கடந்து வந்து இதற்காக இங்கு கூடினோம். உலகில் அமைதி நிரந்திரமாய் நிலவ எங்கள் நட்பை மேலும் உறுதியாக்கிக் கொள்வோம்.

## நான்கு வயது காரோட்டி



காரை ஓட்ட ஓட்டுநர், இருக்கையில் அமர்ந்து ஸ்டியரிங்கைப் பிடிக்க விரும்பாத சிறுவர் சிறுமியர் உண்டோ? இப்படிப்பட்ட சிறுமிகளில் ஜூஹா அக்கினி ஹோத்திரி ஒருத்தி. இன்று இவள் காரில் தனியாக அமர்ந்து அதை ஓட்டிச் செல்லக் கூடியவள். இவ்வளவுக்கும் அவளுக்கு வயது நான்கே. அவளுக்கு பொம்மைக் கார்கள் மிகவும் பிடிக்கும். இதைக் கண்ட அவளது தந்தை அவளுக்குக் கார் ஓட்டக் கற்றுக் கொடுப்பது என்று தீர்மானித்தது அவர் ஓட்டுநர் பயிற்சிப் பள்ளியிலும் சேர்த்தார்.

இதற்குப் பின் போக்குவரத்து விதிகளையும், குறிகளையும் சைகைகளையும் இவள் தெரிந்து கொண்டாள். இப்போது இவளால் தனியாகவே காரை ஓட்ட முடியும். இவளது தந்தை பிரமோத்குமார், தாய் வனிதா. இவள் மூன்றாவது வயதில் நீச்சல் கற்றுக் கொண்டாள். இப்போது இவளுக்கு பனிரெண்டு அடி உயரத்திலிருந்து குதித்து நீந்தத் தெரியும்.



மைசூரைச் சேர்ந்த பொறியாளர் குழந்தைகளுக்காக ஒரு கார் தயாரித்திருக்கிறார். டாய் மோடோ என்ற இந்த காரில் 35 சிசி. பெட்ரோல் என்ஜின் பொருத்தப்பட்டுள்ளது. இதன் விலை 15,000 ரூபாய்



# இணைந்து செல்

திரிபுரத்திலுள்ள தியாகு என்ற பணக்கார விவசாயி தன் மகள் உமாவைத் தன் தூரத்து உறவினன் சபாபதியின் மகனான கோவிந்தனுக்கு கல்யாணம் செய்து கொடுக்க எண்ணினான். கோவிந்தன் ஏழைக் குடும்பத்தில் பிறந்தவன்.

உமாவின் கல்யாணப் பேச்சு எழுந்ததும் தியாகுவின் மனைவி சிவகாமி'' என் ஒரே மகளை ஒரு ஏழையின் மகனுக்குக் கொடுப்பதா? என் சிநேகிதி பர்வதத்தின் மகன் ரவிக்குக் கொடுக்கலாம். நல்ல அழகு. பணக்காரக் குடும்பத்தில் பிறந்தவன். நம் அந்தஸ்திற்கும் ஏற்றவன்'' என்றாள்.

தியாகுவோ ''கோவிந்தனும் அழகாய்த்தான் இருக்கிறான். நம் சொத்தெல்லாம் நம்மகளுக்குத் தானே. கணவன் மனைவி ஒரு ஏரில் பூட்டிய இரண்டு எருதுகள் போல. இரண்டு எருதுகளும் சேர்ந்து சென்றாலே நிலத்தை உழுது பயிர் செய்ய முடியும். கோவிந்தனின் குணமும் பிறரிடம் பழகும் விதமும் மிகவும் உயர்ந்திருப்ப தால் அவன்தான் நம் உமாவிற்கு ஏற்றவன்'' என்றான்.

அதுகேட்டு சிவகாமி ''ரவி மாத்திரம் கோவிந்தனைவிட எந்த விதத்தில் குறைந்தவன். அவனுக்குப் பழகத் தெரியாது என்றும் கெட்ட குணங்கள் கொண்டவன் என்றும் நீங்களே தீர்மானித்து விட்டீர்களா?'' என்று சற்றுக் கோபத்தோடு கேட்டாள்.

தியாகு சிரித்தவாறே ''நான் அப்படி எதுவும் சொல்லவில்லையே. கோவிந்தனுக்கும் ரவிக்கும் ஒரு சிறு பரீட்சை வைத்துப் பார்ப்போம். அதில் யார் தேறுகி

—சிந்து சங்கர்—

றானோ அவனே உமாவின் கண வன் என்று தீர்மானிக்கலாம். சரியா?" எனக் கேட்கவே சிவகாமி யும் அதற்கு இணங்கினாள்.

மறுநாள் தியாகு ரவியை அழைத்து "நீ அடுத்த ஊருக்குப் போய் நல்ல மாடாகப் பார்த்து ஒரு ஜோடி எருதுகளை விலைக்கு வாங்கி நடத்திக் கொண்டு வா" என்று கூறிப் பணமும் கொடுத் தான். எருதுகள் சேர்ந்து நடந்து வேலை செய்பவையாக இருக்க வேண்டும். என்றும் ரவியிடம் எச்சரித்து அனுப்பினான்.

ரவியும் காலையில் எழுந்து மாட்டுச் சந்தைக்குப் போனான். அங்கு விலைக்குப் பல ஜோடி எருதுகள் வந்திருந்தன. அவன் வெகுநேரம் சுற்றிப் பார்த்து விட்டு முடிவில் ஒரு தரகனை அணுகி 'இரண்டு எருதுகளும் இணைந்து வேலை செய்யும் நல்ல ஜோடியாகக் கிடைக்குமா?" என்று கேட்டான்.

தரகன் ரவி சொன்னதைக் கேட்டு சிரித்தான். இதனால் ரவி கோபித்துக் கொண்டு வேறு தரகர்களை அணுக அவர்களும் அவன் சொன்னதைக் கேட்டுச் சிரித்தார்கள். ரவி உடனேயே ஊர் திரும்பி வந்து தியாகுவிடம் "சந்தையில் பல ஜோடி எருது கள் வந்திருந்தன. ஆனால் நான் யாரிடமும்போய் இணைந்து செல் லும் எருதுகளாக ஒரு ஜோடி வேண்டும் என்று கேட்டதும்



கேலியாகச் சிரித்தார்கள். இது மரியாதைக் குறைவு என எண்ணி அவர்களிடம் வியாபாரம் செய்யாமல் திரும்பி வந்துவிட்டேன்.'' என்று கூறிப் பணத்தை தியாகுவின் முன் வைத்துவிட்டுப் போனான்.

அதன் பிறகு தியாகு கோவிந்தனை அழைத்து இணைந்து செல்லும் நல்ல ஒரு ஜோடி எருதுகளை சந்தையிலிருந்து வாங்கிக் கொண்டு வரும்படிப் பணம் கொடுத்து அனுப்பினான். கோவிந்தனும் அன்று மாலையே ஒரே மாதிரியான இரு எருதுகளை ஓட்டிக் கொண்டு ஊருக்கு திரும்பினான். தியாகு அவற்றைப் பார்த்து மகிழ்ந்து போய் ''பேஷ்! எருதுகள் நன்றாகவே இருக்கின்றன. ஆனால் இவை இணைந்து செல்கின்றனவா?'' என்று கேட்டான்.

கோவிந்தனும் ''அதைப் பரீட்சித்து விட்டே வாங்கி வந்தேன்'' எனவே அப்போது அங்கே இருந்த சிவகாமி ஏளனமாக ''எப்படியப்பா பரீட்சித்தாய்?'' என்று கேட்டாள். கோவிந்தனும் ''இவற்றை வாங்கி முன் இவற்றை ஒன்றன் பக்கம் மற்றதை நிறுத்தி இவற்றின் அடுத்தடுத்த முன்னங்கால்களை ஒரு கயிறால் இறுகக் கட்டி நடக்க வைத்தேன். இவை இணைந்து நடந்தன.'' என்றான்.

தியாகு அவனிடம் எருதுகளை மாட்டுக் கொட்டிலுக்கு ஓட்டிப் போகச் சொல்லிவிட்டு சிவகாமியிடம் ''பார்த்தாயா ரவிக்கும் கோவிந்தனுக்கும் உள்ள வித்தியாசத்தை? ஒரு வார்த்தையைப் பொறுக்காமல் ரவி ஓடி வந்துவிட்டான். கோவிந்தனோ நன்கு பேசி நல்லதாகப் பார்த்து எருதுகளை வாங்கி வந்தான். இதில் வெற்றி பெற்றவன் கோவிந்தன் தானே? என்று கேட்டான்.

சிவகாமியும் ''ஆமாம். கோவிந்தன் தான் நம் உமாவிற்கு ஏற்றவன்'' என மகிழ்ச்சியுடன் கூறினாள்



# இயற்கை விநோதங்கள்



## தேனீயின் உடல் கூடு

ஐந்து கோடி ஆண்டுகளுக்கு முன் தேனீ இருந்ததா என்றால் இருந்தது என்றே கூறலாம். என ஜெர்மானிய ஆராய்ச்சி யாளர்கள் கூறுகிறார்கள். ஈபெல் பகுதியில் பாறைகளுக்கிடையே இருந்த ஒரு தேனீயின் உடல் கூட்டைக் கொண்டு இந்த முடிவுக்கு வந்துள்ளார்கள். இது உலகிலேயே மிகப் பழமை யானதாம். 9 மி. மீட்டர் உள்ள இந்தத் தேனீ கொஞ்சம் கொஞ்சமாக உருமாறி தற் போதைய தேனீயாக மாறியதாம்.



## ராட்சஸப் பல்லி முட்டைகள்

சீனாவில் ஏழரைக் கோடி ஆண்டு களுக்கு முன் இருந்த ராட்சஸப் பல்லி முட்டைகளும், அமெரிக்காவில் 14 கோடி ஆண்டுகளுக்கு முன்பிருந்த ராட் சஸப் பல்லி முட்டைகளும் கிடைத் துள்ளன. சீனாவில் ஹோனான் பகுதி யில் கிடைத்த இரு முட்டைகளை ஜெர் மனியில் ஹனோவர் ஆராய்ச்சிக் கூடத்திற்கு அனுப்பினார்கள். அங்கு அம்முட்டைகளுள் இருந்தவற்றை ஆய்ந்து வருகிறார்கள். அமெரிக்காவின் டென் வரில் கிடைத்த ராட்சஸப் பல்லி முட்டை களுள் உள்ளவற்றையும் ஆராய்ந்தார் கள். கொலராடோ பகுதியிலும் இத் தகைய முட்டை ஓடுகள் கிடைத்தன. இந்த முட்டைகள் கோழிமுட்டை அளவிற்கு இருந்திருக்க வேண்டுமாம்.



## தமிழ்நாட்டுப் பழ வௌவால்

கின்னெஸ் புத்தகத்தில் உலகில் மூன்று வகை பழ வௌவால்கள் உள்ள தாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. 45 ஆண்டுகளுக்கு முன் ஹரடன் என்ற பறவை ஆராய்ச்சியாளர் தமிழ்நாட்டின் மேற்குத் தொடர்மலை இந்த வகை வௌவாலைப் பார்த்து அதை பம்பாய் இயற்கை வரலாற்றுக் கழகத்திற்கு எடுத்துச் சென்றார். அது மிகவும் அபூர்வமானது என டாக்டர் சலீம் அலி என்ற ஆராய்ச்சியாளர் கூறி அதற்குப் பெயரும் வைத்தார். இந்த ஆண்டிலும் பம்பாய் ஆராய்ச்சியாளர் ஒருவரும் ஆங்கில ஆராய்ச்சியாளர் ஒருவரும் இத்தகைய வௌவாலை தமிழ்நாட்டில் அதே இடத்தில் பார்த்தார்களாம். இதுபற்றி ஆய்வு நடந்து வருகிறது.

Say "Hello" to text books and friends
'Cause School days are here again
Have a great year and all the best
From Wobbit, Coon and the rest!






SUPER
RUBBER










THE

# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ.100

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1994 ஜனவரி மாத இதழில் வெளியிடப்படும்**



M. Natarajan



Phal Singh Girota

* தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். * நவம்பர் 10ந் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.
* எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ. 100/- பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. * தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-600 026**

---

## செப்டம்பர் மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ: **மலரப் போகும் மொட்டு**

இரண்டாவது போட்டோ: **துள்ளத் துடிக்கும் சிட்டு**

பரிசு பெற்றவர்: **திரு. ஆர். தியாகராசன், திருவண்ணாமலை.**




**Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.**


---

Bakeman's

# YOU'LL DROP



## EVERYTHING FOR BAKEMAN'S MILK DROPS






R K SWAMY/BBDO BH. 7264 J